

# நேஷனல் தமிழ் வாசகம்



முதற் படிவம் — இரண்டாம் பிரிவு

ஆசிரியர்:

டாக்டர் மா. இராசமாணிக்கம், M.A., L.T., M.O.L., Ph.D.

தியாகராசர் கல்லூரி, மதுரை.



...ரிஷிங் கம்பெனி, சென்னை-1

# நேஷனல் தமிழ் வாசகம்

## முதற் படிவம் — இரண்டாம் பிரிவு

டாக்டர் மா. இராசமாணிக்கம்,
M.A., L.T., M.O.L., Ph.D.
தமிழ்ப் பேராசிரியர், தியாகராசர் கல்லூரி, மதுரை

[Paper used: 24 lbs. White Printing]

நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி
6, கொண்டி செட்டித் தெரு, சென்னை-1

 1958 [விலை { அணா 12 / ந. பை. 75

முதற் பதிப்பு —1951
இரண்டாம் பதிப்பு —1952
மூன்றும் பதிப்பு —1954
நான்காம் பதிப்பு —1955
ஐந்தாம் பதிப்பு —1956
ஆறும் பதிப்பு —1957
ஏழாம் பதிப்பு —1958



APPROVED FOR CLASS USE—DETAILED STUDY
BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE
[Supplement to Part I-B of the
Fort St. George Gazette dated 19-5-1954, Page 81]

*Printed at*
*Sree Ramaprasad Press, 56, Broadway, Madras-1*

# முகவுரை

நேஷனல் தமிழ் வாசகம் என்னும் பெயர்கொண்ட இந் நூல் வரிசை கல்வித்துறையினர் அண்மையில் (26-6-'51 இல்) வெளியிட்ட பாட இயலை உளங்கொண்டு எழுதப்பெற்ற தாகும்.

முதல் மூன்று படிவங்களிலும் வட்டாரமொழி அல்லது தாய்மொழி இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதற் பிரிவுக்கு வாரத்தில் நான்கு பிரிவேளைகளும் (Periods), இரண்டாம் பிரிவுக்கு மூன்று பிரிவேளைகளும் இப்புதிய திட்டத்தில் ஒதுக்கப்பட்டுள்ளன. இரண்டு பிரிவுகளிலும் இன்னின்ன பொருள்பற்றிய பாடங்கள் இருக்கலாம் என்பது இப்புதிய திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயின், முதற் பிரிவு நூலில் காணப்படும் தமிழ் நடையைவிட இரண்டாம் பிரிவு நூலில் காணப்படும் தமிழ் நடை சிறிதளவு உயர்ந்த தாக இருத்தல் வேண்டும் என்பது இத்திட்டத்தில் வற்புறுத் தப்படுகிறது. எனவே, ஒரே படிவத்திற்கு இரு வேறு பாட நூல்கள் தேவைப்படுகின்றன. இத்தேவையை முன்னிட்டே இப்புதிய வாசக வரிசை வெளியிடப்பெற்றது.

இந்நூல், மூன்று பிரிவேளை தமிழ் படிக்கும் முதற்படிவ மாணவர்க்கென்று எழுதப்பெற்றது. ஆதலின், இதன்கண் சிறிது உயர்ந்த நடையில் பாடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. உரைநடைப் பாடங்கள் 40 பக்க அளவில் இருத்தல் வேண் டும் என்பது புதிய திட்டத்தின் விதி. ஆயினும், ஒரு சில பக்கங்கள் மிகுந்திருத்தல், நடத்துவோர் சுவைக்கேற்பப் பாடங்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வசதியளிப்பதாகும். ஆதலின், சில பாடங்கள் மிகுதியாகத் தரப்பட்டுள்ளன. ஒவ் வொரு பாடத்தின் ஈற்றிலும் அருஞ்சொற்பொருள், வினுக் கள், பாடத்தொடர்பான பலவகைப் பயிற்சிகள் (Multiple choice questions) இலக்கணக் குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன. மாணவர் ஒவ்வொரு பயிற்சியையும் விருப்பத்துடன் செய்வா

ராயின், அவர்க்குத் தமிழறிவும், கட்டுரை எழுதும் வன்மையும் நன்கு சிறக்கும்.

செய்யுட் பகுதியில் 75 வரிகள் இருத்தல் வேண்டும் என்பதும் புதிய திட்டத்தின் விதி. ஆயின், முன் சொல்லப்பட்ட முறைப்படி, இந்நூலில் ஏறக்குறைய 150 வரிகள் தரப்பட்டுள்ளன. இப்பகுதியில் ஆசிரியர் குறிப்பும் அரும்பதவுரையும் வினாக்களும் பயிற்சியும் தரப்பட்டுள்ளன.

சுருங்கக் கூறின் மேற்சொன்ன புதிய பாட இயலை அடியொற்றி இந்நூல் எழுதப்பெற்றுள்ளது என்பது இதனைக் கண்ணுறும் நன்மக்கள் நன்குணர்தல் கூடும். இந்நூலை முதற் படிவத்து மாணவர் படித்துப் பயன்பெறத் தமிழன்னை அருள்புரிக.

தியாகராசர் கல்லூரி,
மதுரை

மா. இராசமாணிக்கம்

## நன்றியுரை

சில படங்கள், பாடல்கள் இவற்றை இந்நூலில் வெளியிடத் தம் இசைவு தந்துள்ள அறிஞர்களுக்கு எங்கள் உளமார்ந்த நன்றி உரியது.

1. காஞ்சி-கயிலாச நாதர் கோவில்: Copyright—Department of Archaeology.
2. பிரிட்டிஷ் பெண்கள்: பாடம்—சோம. லெ. இலக்குமணச் செட்டியார், பி.ஏ.
3. அந்திப் பொழுது: (செய்யுள்-16 வரிகள்)—பாரதியார், சென்னை அரசாங்கம்.
4. மங்கிய வானில் குன்றின் காட்சி: (செய்யுள் - 4 வரிகள்)—பாரதிதாசனார், இன்பநிலையம், இராமச்சந்திரபுரம்.

நேஷனல் பப்ளிஷிங் கம்பெனியார்

## உள்ளுறை

# தேசிய கீதம்

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய ஜயஹே!

## நாட்டு வணக்கம்

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி
செலுத்துகிறாய்.

நின் திருநாமம், பஞ்சாபையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்;
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில்
கலக்கிறது;

இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப்
பாடுகின்றன;

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி! வெற்றி! வெற்றி!

# முதற் படிவம்—இரண்டாம் பிரிவு

## 1. காஞ்சி மாநகரம்

1. வடக்கே வேங்கடத்தையும் தெற்கே கன்னியா குமரியையும் கிழக்கிலும் மேற்கிலும் கடலையும் எல்லைகளாகப் பெற்ற நிலப்பகுதி **தமிழகம்** எனச் சங்க காலத்திற் பெயர் பெற்றிருந்தது. வேங்கடம் முதல் ஏறக்குறைய தென் பெண்ணையாறுவரை பரவியுள்ள இடம் அக்காலத்தில் **தொண்டை நாடு** எனப் பெயர் பெற்றது. அதன் தலைநகரம் **காஞ்சி மாநகரம்** என்பது.

2. காஞ்சி மாநகரம், கச்சிமாநகர், காஞ்சீபுரம் என்றும் நூல்களில் வழங்கப்பட்டுள்ளது. அது புத்தர் காலத்திலேயே புகழ் பெற்ற நகரமாக இருந்தது என்று பௌத்த நூல்கள் கூறுகின்றன. சங்க காலத்தில் தொண்டைமான்கள் அதனைத் தங்கள் கோ நகரமாகக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பிறகு சோழர்கள் தொண்டை நாட்டைப் பிடித்து ஆண்டபொழுதும் காஞ்சியே தொண்டை நாட்டுக்குத் தலைநகரமாக விளங்கியது. ஏறத்தாழக் கி. பி. 300 முதல் 900 வரை தமிழகத்தில் பேரரசராக இருந்த பல்லவர்க்கும் அது தலைநகரமாகவே இருந்தது.

3. பல்லவர்க்குப்பின் தமிழகத்தை ஒரு குடைக்கீழ் வைத்தாண்ட சோழப் பேரரசர் காலத்தில், காஞ்சி, சோழப் பெருநாட்டின் வட பகுதிக்குத் தலைநகராக இருந்தது. அங்குக்

'சோழர் மாளிகை' என்று பெயர் பெற்ற அரண் மனை இருந்தது. சோழர்க்குப் பிறகு தமிழகம் விஜயநகர அரசர் ஆட்சிக்கு உட்பட்டது; அப் பொழுதும் கச்சி மாநகரம் தொண்டை நாட்டின் தலைநகராகவே விளங்கியது. இங்ஙனம் காஞ்சீ புரம் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளாகவே வரலாற்றுப் புகழ்பெற்ற பெருநகரமாக விளங்கி வந்தது.

4. காஞ்சீபுரம் சமயத்துறையிலும் பழைமை வாய்ந்தது. காஞ்சியில் புத்தர் அற உபதேசம் செய்தார் என்பது புத்தரைப் பற்றிய கதை ஒன்றில் கூறப்பட்டுள்ளது; 'அசோகன் காஞ்சியில் ஒரு ஸ்தூபியை நாட்டினன் என்று பௌத்தர்கள் கூறு கின்றனர்,' என்று கி. பி. ஏழாம் நூற்றுண்டில் காஞ்சியைப் பார்வையிட்ட ஹிவான்சுவாங்கு என்னும் சீன யாத்திரிகர் கூறியுள்ளார். ஏறத் தாழக் கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் காஞ்சியில் பௌத்தம் நல்ல நிலையில் இருந்தது என்பதை **மணிமேகலை** என்னும் தமிழ்க் காவியம் கொண்டு அறியலாம். காஞ்சியில் இன்றுள்ள காமாட்சி யம்மன் கோவிலைச் சுற்றியுள்ள பகுதியில் பௌத்த விக்கிரகங்கள் கிடைப்பதை நோக்க, அப்பகுதி பண்டைக் காலத்தில் பௌத்தர்கள் வாழ்ந்த இடமாக இருக்கலாம் என்று அறிஞர்கள் கருது கிறுர்கள்.

5. கச்சியில் சமணமும் சிறப்புற்று இருந்தது என்று சமண நூல்கள் கூறுகின்றன. காஞ்சியில் வேகவதி ஆற்றக்கரையில் உள்ள திருப்பருத்திக் குன்றம் என்பது, பழைய காலத்தில் 'சமண காஞ்சி' எனப் பெயர் பெற்றது. அங்குச் சமணர்

கோவில் சிறப்பாகக் காணப்படுகின்றது. அக் கோவிலில் உள்ள ஓவியங்களும் சிற்பங்களும் கண்ணைக் கவர்கின்றன.

6. காஞ்சீபுரம் வைணவத்திற்குப் பெயர் பெற்ற இடமாகும். அருளாளப்பெருமாள் அல்லது வரதராஜப் பெருமாள் கோவில், வைகுந்தப் பெருமாள் கோவில், உலகளந்த பெருமாள் கோவில் முதலியன வைணவ சமயத்தின் செல்வாக்கை உணர்த்துவனவாகும். திருமங்கையாழ்வார் போன்ற பெரியவர்கள் அங்குள்ள பெருமாள் கோவில்களைத் தரிசித்துப் பல பாடல்களைப் பாடியுள்ளனர்.



காஞ்சி—கயிலாசநாதர் கோவில்

7. காஞ்சி-ஏகாம்பரேசுவரர் கோவில், திருக் கச்சி மேற்றளி முதலிய கோவில்கள் கி. பி. ஏழாம்

நூற்றுண்டில் வாழ்ந்த அப்பராலும் சம்பந்தராலும் பாடப்பட்டவை. இராஜசிம்ம பல்லவனுல் கட்டப் பட்ட கயிலாசநாதர் கோவில், ஐராவதேசுவரர் கோவில், மதங்கீசர் கோவில் என்பன சிற்பக் கலைக்குப் பெயர் பெற்ற சிவன் கோவில்கள். காஞ்சியில் சைவம் நன்கு வளர்ச்சி பெற்றது என்பதை அறிவிக்க இக் கோவில்களே தக்க சான்ருகும்.



கயிலாசநாதர் கோவில் நடனச்சிற்பம்
(பக்கம் 5)

8. பண்டைக் கால முதலே மேற் சொல்லப் பட்ட நான்கு சமயங்களும் காஞ்சியில் வளர்ந்து வந்தன. அச்சமயங் களைச் சேர்ந்த மதவாதிகள் அங்கு இருந்து, தங்கள் தங்கள் சமயத்தை வளர்த்துவந்தனர். அதனுல் காஞ்சி மாநகரத்து மக்கட்குப் பல சமயங் களைப் பற்றிய அறிவு நன்கு பரவியிருந்தது.

9. காஞ்சியில் பெரிய வடமொழிக் கல்லூரி

ஒன்று இருந்தது. அதனிற் சேர்ந்து படிக்கத் தமிழகத்துக்கு அப்பாலிருந்தும் பலர் வந்தனர். காஞ்சியில் படித்துப் புகழ்பெற்ற தர்மபாலர் என்பவர் வட இந்தியாவில் குப்தர்கள் வைத்து நடத்திய நாலந்தாப் பல்கலைக் கழகத்திற் பேராசிரியராக இருந்தார். பல்லவர்கள் வடமொழியையும் தென்மொழியையும் நன்கு வளர்த்தார்கள். அவர்கள் காலத்தில் வாழ்ந்த அப்பர், "கல்வியில் கரையிலாத காஞ்சி மாநகர்," எனக் காஞ்சீபுரத்துக் கல்விச் சிறப்பைப் பாராட்டியுள்ளார்.


கயிலாசநாதர் கோவில் நடனச் சிற்பம்

10. இவ்வாறு வரலாற்றுத் துறையிலும், சமயத் துறையிலும், கல்வித் துறையிலும் சிறந்திருந்த காஞ்சி நகரத்தில் சிற்பம், ஓவியம் முதலிய கலைகளும் நன்கு வளர்க்கப்பட்டன. காஞ்சி-கயிலாசநாதர்

கோவிலில் உள்ள சிவபெருமானுடைய **நடனச் சிற்பங்கள்** கண்ணையும் கருத்தையும் கவரத் தக்கவை. வைகுந்தப் பெருமாள் கோவில் சுவர்களில் பல்லவர் வரலாற்றை உணர்த்தும் சிற்பங்கள் பேரழகுடன் காணப்படுகின்றன. என்றும் நிலைபெற்றிருக்கத் தக்கவாறு கற்கோவில்களைக் கட்டிய பெருமை பல்லவர்க்கே உரியது. அங்ஙனம் கட்டப்பெற்ற பெரிய கற்கோவில்களைப் பெற்ற பெருமை காஞ்சி நகருக்கே உரியதாகும்.

11. இங்ஙனம் பல கலைகளும் வளர்க்கப்பெற்ற கச்சி மாநகரம் இன்று ஒரு சாதாரண ஊராகக் காணப்படுகின்றது. ஆயினும் அங்குள்ள பல சமயக் கோவில்களும் கல்வெட்டுக்களும் அந்நகரத்தின் பழைமையை நன்கு உணர்த்துகின்றதை அறிவுடையோர் கண்டு களித்தல் கூடும்.

### அருஞ்சொற்பொருள்

சங்ககாலம் - பாண்டியர் மதுரையில் தமிழ்ச் சங்கம் வைத்துப் புலவர்களைக் கொண்டு நூல்கள் செய்த காலம். அதன் கடைசிக்காலம் ஏறத்தாழக் கி. பி. 300 என்னலாம். கோநகரம் - தலைமைப் பட்டணம். பேரரசர் - பல நாடுகளை வென்று அடக்கி ஆண்டவர். சமயம் - மதம். துறை - வழி. அறம் - தருமம்; நன்னெறி. சமணம் - ஜைனமதம். திருமங்கையாழ்வார் கி. பி. எட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர். மேற்றளி - (மேல்+தளி) மேற்கில் உள்ள கோவில். ஏகாம்பரேசுவரர் - ஒற்றை மாமரத்தின் கீழ் இருக்கும் சிவபெருமான். இராஜசிம்ம பல்லவன் - கி. பி. 7-ஆம் நூற்றுண்டின் இறுதியிலும், 8-ஆம் நூற்றுண்டின் முற்பகுதியிலும் காஞ்சியை ஆண்டவன். அப்பர் - திருநாவுக்கரசர். சிற்பக்கலை - கல் முதலியவற்றில் உருவங்களைச் செதுக்கும் கலை. வடமொழி - சம்ஸ்கிருதம். தென்மொழி - தமிழ். கல்வெட்டு - கல்லில் வெட்டப்படும் எழுத்து.

### கேள்விகள்

1. தமிழகத்தின் எல்லைகள் எவை?
2. தொண்டைநாடு எது? அதன் தலைநகரம் யாது?
3. காஞ்சி எவரெவர் ஆட்சியில் இருந்தது?

4. ஹிவான் சுவாங்கு யார்? அவர் யாது கூறி யுள்ளார்?
5. சமண காஞ்சி என்பது யாது? அதன் சிறப்பு என்ன?
6. காஞ்சி வைணவத்துக்குப் பெயர் பெற்றது என் பதை எப்படி அறியலாம்?
7. காஞ்சியில் உள்ள சிவன் கோவில்கள் எவை?
8. காஞ்சி கல்விக்குப் பெயர் பெற்றது என்பதை உணர்த்தும் சான்றுகள் எவை?
9. காஞ்சியில் சிற்பக் கலைக்குப் பெயர்பெற்ற கோவில் கள் எவை?
10. கல்வெட்டு என்பது யாது?

## பயிற்சி

1. பேரரசர் × சிற்றரசர். பெருநாடு × சிறுநாடு — இவற்றை உங்கள் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.

2. கோநகரம், தலைநகரம்—இவை ஒரே பொருளைத் தருவன. ஏறக்குறைய, ஏறத்தாழ, சுமார்—இவையும் ஒரே பொருளில் வருபவை. இவைபோல் வருவனவற்றைக் குறித்துக் கொள்க.

3. அருளாளன்-தமிழ்ப்பெயர் } இவையும் ஒரே
வரதராஜன்-வடமொழிப்பெயர் } பொருளைத் தருவன.
மகிழ்ச்சி - தமிழ்ச்சொல் } இவ்வாறு வரும் சொற்களை
சந்தோஷம் - வடசொல் } யும் கவனியுங்கள்.

4. வரலாறு+புகழ் =வரலாற்றுப் புகழ்
வயிறு +வலி =வயிற்றுவலி
நாடு +பெருமை =நாட்டுப் பெருமை

ஆடு+கால், நாடு+கு, வீடு+இல்—இவற்றைச் சேர்த் துக்கூறுக.

5, ஒரு கருத்தைத் தெரிவிக்கும் பல வாக்கியங்களின் சேர்க்கை பத்தி அல்லது பாரா (Para) எனப்படும். இப் பாடத்தில்பதினொரு பாராக்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றை யும் படியுங்கள்; அது தெரிவிக்கும் கருத்தைத் தெரிந்து அதற் குத் தலைப்புக் கொடுங்கள். முதல் பாராவுக்குத் 'தமிழக மும் காஞ்சி மாநகரமும்' என்று தலைப்புக் கொடுக்கலாம். அடுத்துவரும் பாராக்களுக்கு நீங்களே தலைப்புத் தருக.

6. (1) காஞ்சியின் பழமை, (2) பல சமயங்கள் வளர்ந்த இடம், (3) பல கலைகள் வளர்ந்த இடம், (4) கல்வி யிற் சிறந்த இடம், (5) அதன் இன்றைய நிலைமை: இக்குறிப் புக்களைக் கொண்டு இப்பாடப்பொருளை ஐந்து பாராக்களில் கட்டுரையாக எழுதுக.

## 2. புலவர் பொன்மொழிகள்

1. அரசன் தான் காக்கும் நாட்டைக் குழவியை வளர்ப்பாரைப்போலப் பாதுகாக்க வேண்டும்.

—நரிவெரூஉத்தலையார்

2. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தவராவர். உணவு எனப்படுவது நிலத்தொடு நீர். ஆதலால் நீரைத் தேக்கி நிலத்தைப் பண்படுத்தி உணவைப் பெருக்கும் அரசனே தன் புகழை என்றும் நிலைபெறச் செய்யும் அரசனாவன்.

—குடபுலவியனார்

3. வறுமையால் வருத்தமுற்று வந்தோரது துன்ப நிலையைக்கண்டு அவர்க்கு உதவி செய்பவரே அறிஞர் பாராட்டுக்கு உரியவர்.

4. செல்வம், அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றையும் உண்டாக்க வல்லது.

—உறையூர் முதுகண்ணன் சாத்தனார்

5. ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்தவற்கு உய்தி இல்லை.

—ஆலத்தூர்கிழார்

6. மழை, பெய்யுங் காலத்துப் பெய்யா தொழியினும், விளைவு குறையினும், மக்களிடம் மாறுபட்ட செயல்கள் தோன்றினும் உலகம் காவலனையே பழிக்கும். இதனை அரசன் உணர்ந்து, உழவரைப் பாதுகாத்து, அக்காவலால் ஏனைக் குடிகளையும் பாதுகாக்க வேண்டும்.

—வெள்ளைக்குடி நாகனார்

7. வேந்தர் தம் நால்வகைப் படைகளையும் கொண்டு பெறுவது வெற்றியாகாது ; மாட்சிமைப் பட்ட அறநெறியைப் பெற்றிருத்தலே அவர்க்கு வெற்றியாகும்.

—மதுரை மருதன் இளநாகனர்

8. வலிமை பொருந்திய அரசன் மீது போருக்கு வலிய வருபவன் யாவர்க்கும் விளங்கத் துயில்கின்ற புலியை இடறின குருடனைப் போன்றவன் ஆவான்.

—சோழன் நலங்கிள்ளி

9. இப்பிறப்பின்கண் செய்ததொன்று மறு பிறப்பிற்கும் உதவும் என்று கருதிப் பொருளை விலையாகக் கொடுத்து, அதற்கு அறத்தைக் கொள்ளுதல் அருள் உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டதன்று.

—முடமோசியார்

10. தமக்கென வாழாது பிறர்க்கென வாழும் தியாகிகள் இந்திரர்க்குரிய அமிழ்தம் பெறினும், தாமே தனித்து உண்ணுர் ; எவரிடமும் வெறுப்பும் கொள்ளார் ; நற்பணிக்குத் தம் உயிரையும் கொடுப்பர் ; உலகம் முழுவதும் பரிசாக வரினும் தீயதைச் செய்யார்.

—இளம் பெருவழுதி

11. அரசன் தன் குடிகளிடம் வரி பெறும் முறையை அறிந்து வரிகொள்ளின், அவனது நாடு அவனுக்குப் பெரும் பொருளைச் சேர்த்துக்கொடுத்துத் தானும் செல்வச் செழிப்புடையதாய் வளர்ச்சி பெறும். மன்னன் அறிவிழந்து தன் அரசியல் அலுவலருடன் **கூடி**, அன்பு கெடக் கொள்ளும் வரிப்பொருளை விரும்பித் தவறு செய்யின், யானை

புகுந்த நிலம் அந்த யானைக்கும் நிலைத்த உணவைத் தராமல் தானும் அழிவதுபோல, அவனும் உண்ணப்பெறுன் ; குடிகட்கும் வருத்தம் மிகும் ; நாடும் சிதையும்.

—பிசிராந்தையார்

12. தான் பெற்ற பிள்ளைகளிற் கல்வியுடையவனைக் கல்விச் சிறப்பால் தாயும் மிகுதியாக விரும்புவாள் ; ஒரு குடும்பத்தாருள் மூத்தவன் யோசனையை விரும்பாது, அவருள் கற்றவன் யோசனையையே அரசன் விரும்புவான் ; கீழ் வகுப்பான் ஒருவன் கற்பின், 'இவன் கீழ்க்குலத்தான்' என்பதைக் கருதாமல் மேற்குலத்தானும் கல்வியின் பொருட்டு அவனை நாடுவன். ஆதலால், எப்பாடு பட்டாயினும் கற்றலே ஒருவற்கு அழகாகும்.

—பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

## அருஞ்சொற்பொருள்

இப்புலவர் அனைவரும் சங்ககாலப் புலவராவர்.

குழவி - குழந்தை. உண்டி - உணவு. உய்தி - பிழைப்பு. ஏனை - மற்ற. காவலன் - குடிகளைக் காப்பவன் ; அரசன். மாட்சி - பெருமை. துயில்கின்ற - தூங்குகின்ற. பொருளை... கொள்ளுதல் - பயன் கருதி அறம் செய்தல். பணி - காரியம். அலுவலர் - உத்தியோகஸ்தர். கடந்த - வென்ற.

## கேள்விகள்

1. அரசன் தன் குடிகளை எவ்வாறு காக்கவேண்டும்?
2. எந்த அரசன் தன் புகழை நிலைபெறச் செய்தவனுவன்?
3. அறிஞர் பாராட்டுக்கு உரியவர் யாவர்?
4. செல்வம் எவற்றை அளிக்க வல்லது? எப்படி?
5. வெள்ளைக்குடி நாகனுர் கூறியுள்ள பொன்மொழி யாது?
6. அரசர்க்கு உண்மை வெற்றி எது?

7. புலியையிடறின குருடனுக்குச்சமமானவன்யாவன்?
8. எது அருள் உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டதன்று?
9. இளம் பெருவழுதி தியாகிகளைப்பற்றிக் கூறியுள்ளது யாது?
10. பிசிராந்தையார் சொல்லியுள்ள பொன்னுரை யாது?
11. பாண்டியன் கல்வியின் தேவையை எப்படி வற்புறுத்தியுள்ளான்?

## பயிற்சி

1. துயில்கின்ற புலியை இடறின குருடன்போல—இது ஒன்றை விளக்க வந்ததால் உவமை, அல்லது உவமானம் எனப்படும். இவ்வாறு வரும் உவமைகளை மனப்பாடம் செய்து, கட்டுரைகளிற் பயன்படுத்தல் கட்டுரைகளை அழகு செய்யும்.

2. காவலன், அரசன், மன்னன்—என்பன வேந்தனைக் குறிக்கும் சொற்கள்.

3. துன்பம், செல்வம், பிறப்பு, வெற்றி, புகழ், வெறுப்பு—எதிர்ச்சொல் கூறுக.

4. பிறர்க்கென, நால்வகைப் படைகள், வெற்றியாகாது, வரிப்பொருள், வருத்தமுற்று—பிரித்துக் காட்டுக.

5. இப்பொன்மொழிகள் எவ்வெப் பொருள்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளன என்பதை விளக்குக.

6. அ என்பதை உச்சரிக்கும்பொழுது உண்டாகும் ஒலிக்கு வரிவடிவம் உண்டா? இல்லை. அஃது ஒலி அளவில் தான் நிற்கிறது. அஃது ஒலி எழுத்து எனப்படும். அதுவே அ என எழுதப்படின் வரி எழுத்து எனப்படும். ஒலிக்கப் படும் எழுத்து ஒலி எழுத்து. எழுதப்படுவது வரி எழுத்து.

(1) கீழ்வரும் எழுத்துக்களைச் சரியாக உச்சரியுங்கள்:—

ந, ன, ண; ல, ள, ழ; ர, ற.

(2) கீழ்வரும் சொற்களைச் சரியாக உச்சரித்துக்காட்டுக:-

நகம், கன்னம், கண்டு; கலம், களம், பழம்; அரங்கம், ஆறு.

## 3. மெக்ஸிகோவின் வீழ்ச்சி

1. கொலம்பஸ் புதிய உலகத்தைக் கண்டு பிடித்த பிறகு ஐரோப்பிய நாட்டினர் அமெரிக்கா விற் குடியேறி வாழ விரும்பினர். அப்பொழுது அமெரிக்காவில் காடுகள் மிகுந்திருந்தன; அமெரிக்க இந்தியர் கிராமங்களையும் நகரங்களையும் அமைத் துக்கொண்டு வாழ்ந்து வந்தனர். ஆனால், அவர் களிடம் குதிரைகளோ, பீரங்கிகளோ இல்லை. அவர் கள் தம்மூர் வந்த எவரையும் வரவேற்று உபசரிக்



மெக்ஸிகோவில் ஹெர்னண்டோ கார்டெஸ்

கும் இயல்பினராக இருந்தார்கள். அந்த நல் லியல்பின்படி அவர்கள் தங்களை வேவுபார்க்க வந்த ஐரோப்பியரையும் வரவேற்று உபசரித்தனர். அவ்வேவுகாரர்கள் இந்தியரின் பலவீனத்தை அறிந்து, தங்கள் தலைவர்களிடம் கூறினர். அத் தலைவர்கள் குதிரைகளையும் பீரங்கிகளையும் துப்

பாக்கிப் படையினரையும் வேறு பலவகைச் சூழ்ச்சி களையும் கையாண்டு, இந்தியரை அடக்கிப் பையப் பைய நாட்டைக் கைப்பற்றினர். இங்ஙனம் அமெ ரிக்காவின் பல பகுதிகளைக் கைப்பற்றிய வீரர் பல ராவர். அவருள் மெக்ஸிகோவைக் கைப்பற்றிய ஹெர்னுண்டோ கார்டெஸ் என்பவர் ஒருவர்.

2. கார்டெஸ் 1485-இல் ஸ்பெயின் நாட்டிற் பிறந்தவர். அவர் இளமை முதலே புதிய உலகத்தில் ஸ்பானிய ஆட்சியை ஏற்படுத்தித் தம் பெயரை நிலை நிறுத்தவேண்டும் என்ற அவாக்கொண்டவர்; இளமையிலேயே போர்ப் பயிற்சி பெற்றவர். அவர் தமது பத்தொன்பதாம் வயதில் கியூபா என்னும் தீவிற்கு அனுப்பப்பட்டார்; அங்கிருந்த இந்தி யரை வென்று, அவர்தம் செல்வத்தைத் தமதாக்கிக் கொண்டார். அவருடைய சூழ்ச்சித் திறன், அஞ் சாமை, வீரம் இவற்றைக் கண்டு ஸ்பானிய வீரர் பலர் அவரைத் தம் தலைவராகக் கொண்ட னர்.

3. வேவுகாரரால் மெக்ஸிகோவின் வளத்தை அறிந்த கியூபா கவர்னர், அந்நாட்டைக் கைப்பற் றக் கார்டெஸை அனுப்பினர். கார்டெஸ் 1518-இல் பத்துக் கப்பல்களுடனும் அறுநூறு போர்வீர ருடனும் பதினெட்டுக் குதிரைகளுடனும் சில பீரங்கி களுடனும் மெக்ஸிகோவின் கரையை அடைந் தார். அவ்வமயம் கியூபா கவர்னர் அவரைக் கியூபா விற்குத் திரும்புமாறு செய்தி அனுப்பினர். கார் டெஸ் அச்செய்தியைப் பொருட்படுத்தாது, நிலத் தில் இறங்கித் தம் வீரர்களுடன் உள்நாடு சென்றார்; அங்கு வாழ்ந்த இந்தியர்களைக் கண்டார். இந்தி யர்கள் குதிரைகளையோ, வெள்ளை நிறத்தவரையோ

முன்னர்ப் பார்த்தறியாதவர்கள்; ஆதலின் அவர்களைப் புதிய கடவுளராகவே கருதினுர்கள்; அவர்கள் கொண்டுவந்திருந்த பீரங்கிகளைக் கண்டு நடுநடுங்கினுர்கள். கார்டெஸ் தம்மைப் பணிந்தவர்களை நண்பர்களாக்கி, எதிர்த்தோரை வென்று, அனைவரையும் ஸ்பானிய ஆட்சிக்கு அடங்கிய குடிமக்களாக இருக்குமாறு செய்து, கப்பல் ஏறினுர். இஃது அவர் மெக்ஸிகோவில் பெற்ற முதல் வெற்றி ஆகும்.

4. கார்டெஸ் மெக்ஸிகோவின் கரையோரமாகவே சென்று, மற்ருேர் இடத்தில் இறங்கினுர்; அக்கரையிலிருந்து உள்நாடு நோக்கி நடந்தார்; இந்தியர் வாழும் சிற்றூர்களையும் பேரூர்களையும் கண்டார்; அவ்விந்தியர் பயிர் வேலையையும் நெசவு வேலையையும் செய்ததைக் கண்டார்; அவர்களுடைய வீடுகளையும் பெருங்கோயில்களையும் பார்த்து வியந்தார்; அவர்கள் ஈட்டி, வில் முதலிய போர்க் கருவிகளைக் கையாள்வதில் வல்லவர் என்பதை அறிந்தார்; அவ்வீரமக்கள் 'அஸ்டெக்ஸ்' என்னும் மற்ருேர் இனத்தவரால் ஆளப்பட்டதையும் அறிந்தார்; அவ்வினத்தவர் உயரிய நாகரிகமுடையவர், போர்ப் பயிற்சியிற் சிறந்தவர் என்பவற்றைக் கேட்டுணர்ந்தார். அவர்தம் தலைவனுன மாஸ்டெஸுமா என்பவன் பெருஞ் செல்வத்திற் புரள்வதாக இந்தியர் கூறினர்.

5. இந்தியர் உரைத்த விவரங்கள் கார்டெஸின் உள்ளத்திற் பதிந்தன. அவர் எவ்விதத்திலும் அஸ்டெக்ஸ் இனத்தாரை வென்று, அவர்தம் செல்வத்தைக் கவர உறுதிகொண்டார்; ஆதலின் உள்நாடு நோக்கி விரைந்தார். அவர் வருகையை

அறிந்த அஸ்டெக்ஸ் இனத்தவர் தலைவன், விலை யுயர்ந்த மணிகளையும் பிறவற்றையும் பரிசாக அனுப்பினான். கார்டெஸ் அவற்றைப் பெற்றுக் கொண்டு திரும்பிவிடுவார் என்று அத்தலைவன் நம்பினான். அவனது எண்ணத்திற்கு மாறாக, கார்டெஸ் தம் படைகளுடன் அத்தலைவன் இருந்த நகரத்திற்குக் கடுகிச் சென்றார்; வழியில் இருந்த இந்தியர்களை விடுதலைப் போரில் இறங்கும்படி தூண்டினார்.

6. கார்டெஸ் அஸ்டெக்ஸ் தலைவனது அரண் மனையை அடைந்தார். அத்தலைவன் அவரை வரவேற்று உபசரித்துப் பெரும்பொருள் பரிசளித் தான். அவ்வமயம் ஸ்பானிஷ் வீரன் ஒருவன் அஸ்டெக்ஸ் வீரன் ஒருவனால் கொல்லப்பட்டான். சூழ்ச்சித் திறனுடைய கார்டெஸ் அதுவே தாம் கருதியதை முடிவுபெறச் செய்யும் சமயம் என்று எண்ணி, அக்கொலைக்கு அத்தலைவனே காரணம் எனக் கூறி, அவனைச் சிறைபிடித்தார்; அவனுக்கு எதிரில் குற்றவாளியை உயிருடன் கொளுத்தச் செய்தார்; அத்தலைவனை ஸ்பெயின் அரசர்க்கு அடங்கி நடக்குமாறு ஆணையிட்டார்.

7. அவ்வமயம் கியூபா கவர்னரால் அனுப்பப் பட்ட புதிய படைத்தலைவர் மெக்ஸிகோவின் கரையை அடைந்தார். கார்டெஸ் அவரிடம் தமது வேலையை ஒப்படைத்துத் திரும்பிவிடுமாறு கவர்ன ரால் கட்டளையிடப்பட்டார். பெரும் பொருள் சேர்க்கவேண்டும் என்ற பேராசையாலும் மெக்ஸி கோவைக் கைப்பற்றிய பெருமை தமக்கே நிலைத் தல் வேண்டும் என்ற ஆவலாலும் கார்டெஸ் கவர் னர் ஆணையை மீறினார்; மெக்ஸிகோவின் கரைக்

குச் சென்று, அப்புதிய படைத் தலைவரைச் சூழ்ச்சி யால் சிறைப்பிடித்து மீண்டார்.

8. அவர் மீண்டும் வருவதற்குள் அஸ்டெக்ஸ் மக்கள் ஸ்பானிய வீரர்களை எதிர்த்துப் போராடினர். கார்டெஸ் பலவாறு சூழ்ச்சி செய்து அவர்களை வென்றார்; அஸ்டெக்ஸ் மக்களுக்குத் தலைவனாக இருந்தவன் போரில் மாண்டான். இறுதியில் மெக்ஸிகோவில் ஸ்பானிய ஆட்சி நிறுவப்பட்டது. அதன் பயனாக, அஸ்டெக்ஸ் இனத்தவரும் இந்திய மக்களும் ஸ்பானிய ஆட்சிக்கு உட்பட்ட குடி மக்கள் ஆயினர்.

### அருஞ்சொற்பொருள்

பையப்பைய - சிறிதுசிறிதாக. சூழ்ச்சி-தந்திரம். சிற்றூர்-கிராமம். பேரூர் - நகரம். அவர்தம் - அவர்களுடைய. திறன்-திறமை. ஆணை - கட்டளை. கடுகி - விரைந்து. நிறுவப்பட்டது-ஏற்படுத்தப்பட்டது.

### கேள்விகள்

1. ஐரோப்பியர் எவ்வாறு அமெரிக்காக் கண்டத்தின் பல பகுதிகளைக் கைப்பற்றினர்?
2. கார்டெஸ் இளமையிற் கொண்ட அவா யாது?
3. கார்டெஸ் மெக்ஸிகோவில் பெற்ற முதல் வெற்றி யாது?
4. கார்டெஸ் மெக்ஸிகோவின் மற்றொரு பகுதியில் கண்டறிந்த செய்திகள் யாவை?
5. கார்டெஸ் அஸ்டெக்ஸ் இனத்தவரை எவ்வாறு வெற்றி கொண்டார்?
6. கவர்னர் ஆணை யாது? அதனைக் கார்டெஸ் ஏன் மீறினார்?

### பயிற்சி

1. வரவேற்று, சூழ்ச்சி, வெற்றி, போர்ப்பயிற்சி, நாகரிகம், விவரங்கள், விலையுயர்ந்த, கடுகி—இவற்றை உங்கள் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.

2. உள்நாடு, சிற்றூர், அறியாதவர், வருகை, புதிய— எதிர்ச்சொல் கூறுக.

3. மரம்+கு=மரம்+அத்து + கு =மரத்துக்கு. எண்ணம்+கு=எண்ணம்+அத்து+கு=எண்ணத்துக்கு. பலம்+கு, வரம்+கு, நலம்+கு—இவற்றைச் சேர்த்துக் கூறுக.

4. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துச் சொல்லுக :—

(1) இந்தியர் உரைத்த——கார்டெஸின் —— பதிந்தன.

(2) இறுதியில் —— ஸ்பானிய —— நிறுவப்பட்டது.

(3) இஃது அவர் —— பெற்ற முதல் —— ஆகும்.

5. (1) நமது உயிர், மெய்யின், (உடம்பின்) உதவி இன்றித் தானே இயங்கவல்லது. அதுபோலத் தாமே இயங்க வல்ல தமிழ் எழுத்துக்கள் உயிர் எழுத்துக்கள் எனப்படும்.

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ—உயிர் எழுத்துக்கள் 12.

(2) நமது மெய் (உடல்) உயிரின் உதவியின்றித் தானே இயங்காது: அதுபோல முன் சொன்ன உயிர் எழுத்துக்களின் உதவி இல்லாமல் இயங்க முடியாத எழுத்துக்கள் மெய் எழுத்துக்கள் எனப்படும்.

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்—மெய்யெழுத்துக்கள் 18.

6. (1) உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டையும் தனித்தனியே உச்சரித்துப் பாருங்கள். இவற்றில் அ, இ, உ, எ, ஒ—இவ்வைந்தும் குறுகிய ஓசை உடையவை. இவை குறில் எனப்படும்.

(2) ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ—இவ்வேழும் நீண்ட ஓசை உடையவை. இவை நெடில் எனப்படும்.

7. இவ்வாறே 18 மெய்களையும் தனித்தனி உச்சரித்துப் பாருங்கள். இவற்றில் (1) க, ச, ட, த, ப, ற—என்னும் ஆறும் வலிய ஓசையுடையவை. இவை வல்லினம் எனப்படும்.

(2) ங, ஞ, ண, ந, ம, ன—என்னும் ஆறும் மெல்லிய ஓசையுடையவை. இவை மெல்லினம் எனப்படும்.

(3) ய, ர, ல, வ, ழ, ள—என்னும் ஆறும் இடைத்தர ஓசையுடையவை. இவை இடையினம் எனப் பெயர் பெறும்.

# 4. ஆற்று வளம்

1. ‘இந்தியா நீருக்கும் உணவுக்கும் குறை வற்ற நாடு’ என்பது பழைய பாடல்; ‘இந்தியா நீருக்கும் உணவுக்கும் குறைவுற்ற நாடு’ என்பது புதிய பாடல். இக்குறை ஏற்படக் காரணம் என்ன? “மக்கள் உயிர் வாழ உணவும் நீரும் தேவை. உணவு விளைபொருள்களால் ஆவது. விளை பொருள்கள் நீரின்றி விளையா. அந்நீரைப் பயன் படுத்தாது விடுவோர் உயிர் வாழ அறியாதார். நீரை வீணாய்ப்போகவிடாமல் பள்ளங்களில் (அணைகள், ஏரிகள், குளங்கள் அமைத்துத்) தேக்கி, வேண்டும் போது பயன்படுத்துவோரே தம் புகழை உலகில் என்றும் நிலைபெறச் செய்தவராவர்,” என்பது **குடபுலவியனார்** என்ற சங்ககாலப் புலவரது பாட்டின் கருத்தாகும்.

2. ஆற்று வெள்ளம் பெருக்கெடுத்து வரும் பொழுது அவ்வெள்ள நீரைத் தேக்கத்தக்க அணை களைக் கட்டுதல் வேண்டும்; வெள்ள நீரைக் கால் வாய்கள் வழியே கொண்டு சென்று ஏரிகளை நிரப்ப வேண்டும்; இங்ஙனம் ஆற்று நீரைத் தேக்கி விளைச் சலுக்குப் பயன்படுத்த வேண்டும் என்பதே மேற் சொன்ன புலவர் கருத்தாகும். இவ்வுண்மையை நன்கு உணர்ந்தே பல்லவர்கள் மிகப் பெரிய ஏரி களை அமைத்தார்கள்; வாய்க்கால்களை வெட்டினார் கள்; சோழர்கள் காவிரியில் அணை கட்டினார்கள்; பெரிய கால்வாய்களை வெட்டினார்கள். வயிரமேகன் வாய்க்கால், இராஜன் வாய்க்கால், வீரசோழன் ஆறு, முடிகொண்டான் ஆறு, மகேந்திரன் தடா கம், கோவளவன் ஏரி என்று வழங்கும் வாய்க்கால்,

ஆறு, ஏரிகளின் பெயர்களைக் கொண்டு இவ் வுண்மை துணியப்படும்.

3. "வான் பொய்ப்பினும் தான் பொய்யா வள முடைய காவிரி" என்று புலவர் கூறியதன் கருத்து யாது? பருவ மழை தவறினும், முன்னரே தேக்கி வைக்கப்பட்டுள்ள காவிரியின் நீர் நாட்டை வளப் படுத்தும் என்பதே அக்கூற்றின் பொருள். இந்த உண்மை ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் மிகுதி யாகக் கவனிக்கப்படவில்லை. இப்பொழுது மழை யற்று, நாடு வளம் சுருங்கிவிட்டதால், நீரின் பெரு மையை அரசாங்கம் உணரத் தலைப்பட்டது; வேண் டும் செயல்களைச் செய்யத் தொடங்கியுள்ளது.



மேட்டூர் அணைக்கட்டு

4. பல இடங்களிற் பாய்ந்ததுபோக, எஞ்சிய காவிரியாற்றின் நீர் வீணே கடலிற் சென்று கலப் பதைப் பயன்படுத்தக் கட்டப்பட்டதே மேட்டூர் அணைக்கட்டு. அஃது ஆங்கில ஆட்சிக் காலத்துக்

கட்டப்பட்டதாகும். அஃது ஏறக்குறைய ஒரு கல் நீளமுடையது; இருநூற்றுப் பதினுன்கடி உயர முள்ளது. இதனுல் ஏற்பட்ட நீர்த்தேக்கம் அறுபது சதுர மைல் பரப்புள்ளது. அணை மேற்பாகத்தில் இருபதடி அகலமும் அடிப்பாகத்தில் நூற்றெழுபது அடி அகலமும் உடையது. அணையின் உயரம் கடல்மட்டத்திற்குமேல் 790 அடியாகும். அதனுல் மூன்ரும் மதகு 770 அடி உயரத்தில் அமைக்கப் பட்டுள்ளது. இரண்டாம் மதகு 720 அடி உயரத்தி லும், மற்ருென்று 690 அடி உயரத்திலும் அமைந் துள்ளன. இம்மதகுகள் கால நிலைக்கு ஏற்ருற்போல நீரை வெளிவிடப் பயன்படுகின்றன. இவை மின்சார சக்தியால் வேலை செய்கின்றன. இங்கு நீரின் உதவியால் மின்சார சக்தி உண்டாக்கப் படுகிறது; மின்சார சக்தியால் பலவகை ஆலைகள் வேலை செய்கின்றன; பல ஊர்களில் விளக்குகள் எரிகின்றன. இந்த அணை ஏற்படுவதற்கு முன் ஒன்றும் விளையாத நிலங்களாக இருந்தவை, இந்த அணையிலிருந்து செல்லும் நீரின் பாய்ச்சலால், இப்பொழுது நன்செய் நிலங்களாக மாறியுள்ளன. ஒரு நீர்த் தேக்கத்தால் ஏற்பட்டுள்ள நன்மையைக் கவனியுங்கள். இது நிற்க.

5. இந்தியாவில் உள்ள எல்லா ஆறுகளும் ஒரு விநாடிக்கு ஏறத்தாழ இருபத்து மூன்று லட்சம் கன அடி நீரைத் தருவதாகக் கணக்கு எடுக்கப்பட் டுள்ளது. பயிர்த் தொழிலுக்கும் பிறவற்றுக்கும் நமக்கு ஒரு விநாடியிற் பயன்படுவது ஏறத்தாழ ஒரு லட்சத்து முப்பத்து மூன்ருயிரம் கன அடி நீராகும்; அஃதாவது ஆறு சத விகிதத்திற்கும் குறைந்த அளவுள்ள நீரே பயன்படுகிறது; எஞ்சி

யுள்ள 94 சத விகித நீர் கடலிற் சென்று கலக்கிறது.

6. இந்திய ஆறுகளில் நீர் ஊற்றுக்களிலிருந்து விநாடிக்கு முப்பதினுயிரம் கன அடி அளவுள்ள தண்ணீர் பயிர்த் தொழில் முதலியவற்றுக்குப் பயன் படுத்தப்படுகிறது. நீர் ஊற்றுக்களை நன்னிலையில் வைப்பின், மேலும் வேண்டும் அளவு தண்ணீரைப் பெறலாம். எனவே, நாட்டில் கடலிற் சென்று வீணுகும் நீரைத் தேக்கவும், புதிய கால்வாய்களை வெட்டி நீரின் போக்கை அவற்றில் விடவும், நீர் ஊற்றுக்களைப் பயன்படுத்தவும் ஏற்ற வசதிகளைச் செய்யின், நம்முடைய ஆறுகள் வான் பொய்ப்பினும் தாம் பொய்யா.

7. பீஹார்—வங்க மாகாணங்களிற் பாயும் 'தாமோதர' ஆறு, ஓரிஸ்ஸாவிற் பாயும் 'மகாநதி' என்னும் பேராறு முதலியன வெள்ளத்தின்போது மக்கட்கு மிக்க சேதத்தை உண்டாக்குகின்றன. 'பஞ்சக் கொடுமையும் வெள்ளக் கொடுமையும் கொடுமையில் சமமானவையே. ஆதலின், இத் தகைய பேராறுகளில் அங்கங்கே அணைகளைக் கட்டி நீரைத்தேக்கி நீரோட்டத்தை முறைப்படுத்த வேண்டும். பல பெரிய கால்வாய்களை வெட்டி ஆற்று நீரைப் பல இடங்களுக்கும் கொண்டு சென்று பயிர்த் தொழிலுக்கும் பிறவற்றிற்கும் பயன் படுத்த வேண்டும். மின்சார சக்தியை உற்பத்தி செய்து மக்கட்கும் ஆலைகட்கும் பயன்படச் செய்ய வேண்டும். ஆறுகள் மூலமாகப் போக்குவரவை மிகுதிப்படுத்த வேண்டும்; மீன் பிடிக்கும் தொழிலை வளர்க்கவேண்டும். இவை நிறைவேறத் தக்க திட்டங்களை அமைக்க வேண்டும் என்பது இந்திய அரசாங்கத்தின் அவாவாகும்.

8. கிழக்குப் பஞ்சாபில் சட்லெஜ் ஆற்றில் கட்டப்படும் *பக்ரா* அணைத்திட்டம், மேற்சொல்லப் பட்ட *தாமோதர* அணைத்திட்டம், பீஹாரில் *கோசி* அணைத்திட்டம், அஸ்ஸாமில் *பிரமபுத்திரா* அணைத்திட்டம், ஐக்கிய மாகாணத்தில் *ரிஹண்டு* அணைத்திட்டம், மத்திய மாகாணத்தில் **நருமதை, வெயின், கங்கை** அணைத்திட்டங்கள், பம்பாய் மாகாணத்தில் **நருமதை**, *தபதி*, **கொய்நா** அணைத் திட்டங்கள், நடு இந்தியாவில் **சம்பல்** அணைத் திட்டம், ஆந்திர நாட்டில் *ராம பாதசாகரம்*, **துங்கபத்திரை, கிருஷ்ணை, பெண்ணையாறு** அணைத் திட்டங்கள், சென்னை மாகாணத்தில் *கீழ்ப்பவானி மணிமுத்தாறு* அணைத் திட்டங்கள் என்பன இந்திய அரசாங்கத்தினரால் திட்டமிடப்பட்டவை. இவற்றுள் சிலவற்றில் வேலை நடைபெற்று வருகின்றது ; பதினுயிரக் கணக்கான மக்கள் வேலை செய்து வருகிருர்கள்.

9. இத்திட்டங்கள் செவ்வையாக நிறைவேற்றப்படுமாயின், ‘வானம் பார்த்த; நிலங்கள் வளம் பெறும்; நாடெங்கும் கால்வாய்கள் பெருகும்; பெரிய கால்வாய்களில் படகுப் போக்குவரவு ஏற்படும்; பயிர்த் தொழிலுக்கு வேண்டும் நீர் பஞ்சமின்றிக் கிடைக்கும்; ஆலைத் தொழில்களுக்கும் மக்களுக்கும் வேண்டும் அளவு மின்சார சக்தியையும் உண்டாக்கிக் கொள்ளலாம்; வேலையில்லாத் திண்டாட்டமும் ஓரளவு ஒழியும். சுருங்கக் கூறின், இயற்கை அளிக்கும் நீரை மனிதன் தன் அறிவு கொண்டு பயன்படுத்தினுல் இன்பவாழ்வுவாழலாம்.

## அருஞ்சொற்பொருள்

கூற்று - பேச்சு, சொல். உற்று-பொருந்தி. வயிரமேகன்-பல்லவ அரசன் பெயர். மகேந்திரன்-பல்லவ அரசன் பெயர். கோ - அரசன். கோவளவன் - அரசனுகிய சோழன். ஏற்ருற் போல - பொருந்திறைற்போல. வான் - மேகம், பருவமழை. பொய்ப்பினும்-தவறினும். வானம் - மழை. பார்த்த – எதிர் பார்க்கின்ற.

## கேள்விகள்

1. குடபுலவியனரது பாடலின் கருத்து யாது?
2. பல்லவரும் சோழரும் நீர்வளத்தை எவ்வாறு பெருக்கினர்?
3. "வான் பொய்ப்பினும்......காவிரி" — என்றதன் கருத்து யாது?
4. மேட்டூர் அணையைப்பற்றி நீங்கள் யாது அறிவீர்கள்?
5. இந்திய ஆறுகளின் நீரில் எந்த அளவு பயன்படுகிறது? எந்த அளவு நீர் வீணுகிறது?
6. நம்முடைய ஆறுகள் வான் பொய்ப்பினும் தாம் பொய்யா—எப்பொழுது?
7. ஆற்று நீரை எவற்றிற்குப் பயன்படுத்த இந்திய அரசாங்கம் பல திட்டங்களைத் தயாரித்து வருகிறது?
8. 'பஞ்சக் கொடுமையும் வெள்ளக் கொடுமையும் கொடுமையில் சமமானவையே' — சந்தர்ப்பம் கூறுக.
9. இந்திய அரசாங்கத்தின் அவா யாது?
10. இந்திய அரசாங்கத்தினரால் திட்டமிடப்பட்டுள்ள அணைத்திட்டங்கள் எவை?
11. இத்திட்டங்கள் நிறைவேற்றப்படின், உண்டாகும் நன்மைகள் யாவை?

## பயிற்சி

1. (1) காவிரி பொய்க்காது.—காவிரி—ஓராறு, ஒருமை எண். பொய்க்காது—வினைமுற்று. ஒருமை எண்.

(2) ஆறுகள் பொய்க்கா—இங்கு, ஆறுகள்—பல ஆறுகள், பன்மை எண். பொய்க்கா - வினைமுற்று, பன்மை எண். ஒருவாக்கியத்தில்வரும் எழுவாயும்பயனிலையும் திணை-பால் - எண் - இடங்களில் ஒத்திருக்கும்.

[நீங்கள் முன் வகுப்பில் திணை, பால் முதலியவற்றைப் படித்திருக்கிறீர்கள் அல்லவா? அந்த இலக்கண அறிவைக் கொண்டு இப்பயிற்சிகளைக் கவனியுங்கள்.]

2. அளவுள்ள, குறைவற்ற, குறைவுற்ற, நூற்றெழுபதடி, அவாவாகும், பயிர்த்தொழில், பெருக்கெடுத்து—இவற்றைப் பிரித்துக் காட்டுக.

3. வளமுடைய, போக்குவரவு, செவ்வையாக, நன்னிலை, பயன்படுத்த, பருவமழை—இவற்றை உங்கள் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.

4. கீழ்வருவனவற்றில் சரியான பொருள் கொண்ட வாக்கியங்களைச் சுட்டிக் காட்டுக:—

(1) பவானி என்பது ஒரு மலை.
பவானி என்பது ஓராறு,

(2) கோவளவன் என்பவன் பல்லவ அரசன்.
கோவளவன் என்பவன் சோழ அரசன்.

5. நீங்கள் நேரிற் பார்த்த ஓர் அணைக்கட்டு அல்லது ஓராறு எவ்வாறு மக்கட்கும் பயிர்த்தொழிலுக்கும் பயன்படுகிறது என்பதை விளக்கி எழுதுக.

6. க (க்+அ)—இது க் என்னும் மெய்யும் அ என்னும் உயிரும் கூடிப் பிறந்த எழுத்து. இவ்வாறு 12 உயிர்களும் பதினெட்டு மெய்களோடும் சேர, (18×12) 216 உயிர் மெய் எழுத்துக்கள் பிறக்கின்றன.

உயிர்மெய் எழுத்துக்கள் 216.

க, கா, கி, கீ, கு, கூ, கெ, கே, கை, கொ, கோ, கௌ—12.

7. மூன்று புள்ளி வடிவமாக இருப்பது ஆய்த எழுத்து. அஃது, இஃது, எஃது—என்றாற்போலச் சொல்லின் இடையில் வரும். இவற்றை நினைவில் வையுங்கள்.

8. நீரின் உதவியால் மின்சார சக்தி உண்டாக்கப் படுகிறது.—இதில் வந்த (1) உயிர், மெய், உயிர்மெய் எழுத்துக்களைத் தனித்தனியே எடுத்து எழுதுக.

(2) உயிர்க் குறில், உயிர் மெய்க் குறில், உயிர் நெடில், உயிர்மெய் நெடில்களைக் குறிப்பிடுக.

# 5. வீரமாமுனிவர்

1. தென்னிந்திய மொழிகளுள் தமிழ் பழைமையானது என்பதையும் அதுவே பழைய இலக்கி



வீரமாமுனிவர்

யத்தை உடையது என்பதையும் உலகறியச் செய்த பெருமை மேனுட்டுக் கிறிஸ்துவப் பாதிரிமார்க்கே உரியது. அவர்கள் நம் தமிழ் நாட்டில் பல ஆண்டுகள் வாழ்ந்தனர்; தங்கள் சமயப் பிரசாரத்தைச் செய்தனர்; தக்காரைக் கொண்டு படித்துத் தமிழிற் புலமை பெற்றனர்; கிறிஸ்துவ மதத் தொடர்பான

செய்யுள் நூல்களையும் உரைநடை நூல்களையும் செய்தனர் ; திருக்குறள் போன்ற சிறந்த நூல்களை மேனாட்டு மொழிகளில் மொழி பெயர்த்தனர் ; தமிழ் அகராதி நூல்களைத் தயாரித்தனர் ; தமிழ் இலக்கண நூல்களை வரைந்தனர் ; தமிழ் இலக்கணத்தைப் பிற மொழி இலக்கணத்துடன் ஒப்பிட்டு, அதன் சிறப்பை உலகறியச் செய்தனர். அப்பெரு மக்களுள் காலத்தால் முற்பட்டவர் *வீரமாமுனிவர்* என்பவர்.

2. வீரமாமுனிவர் இத்தாலிய நாட்டினர் ; பதினெட்டாம் நூற்றாண்டினர் ; ஏசுநாதர் சங்கத்தைச் சேர்ந்தவர். அவரது இயற்பெயர் கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி என்பது. அவர் தமிழ் அறிஞரான பிறகு வீரமாமுனிவர் எனத் தமிழில் அழைக்கப்பட்டார். அவர் இளமையில் துறவு பூண்டு கிறிஸ்துவ சமய நூல்களை நன்கு கற்றுச் சமயபோதகர் ஆனார் ; தமது சமயத்தைத் தமிழ் நாட்டில் பரப்ப ஏசு சங்கத்தவரால் இங்கு அனுப்பப்பட்டார். தமிழ் நாட்டில் ஏசு மதத்தைத் தமிழ் மொழியில் பரப்பவும், அம்மொழியிற் புலமை பெறவும் விரும்பி, அவர் சிறந்த தமிழ்ப் புலவர்களிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைப் பல ஆண்டுகள் வருந்திக் கற்றார்.

3. முனிவர் தமது கிறிஸ்துவ சமயத் தொடர்பான பெருங் காவியம் ஒன்றைத் தமிழிற் செய்ய விரும்பினார். அவ்விருப்பத்தின் பயனே *தேம்பாவணி* என்னும் செய்யுள் நூலாக 1726-இல் வெளிப்பட்டது. அஃது ஏசுநாதரை வளர்த்த சூசையப்பரது வரலாற்றை விரித்துரைப்பது. செய்யுட்கள் சொல்லழகும் பொருள் அழகும்

பொருந்தியவை. சிந்தாமணி, கம்பராமாயணம் என்னும் தமிழ்க் காவியங்களின் செய்யுள் மணம் தேம்பாவணியில் காணலாம். இதில் முனிவர் பல இடங்களில் திருக்குறட் கருத்துக்களை எடுத்து ஆண்டுள்ளார்.

4. வீரமாமுனிவர் கொள்ளிடத்தின் வடகரையில் ஏலாக்குறிச்சி என்னும் சிற்றூரில் மாதா கோவில் ஒன்றைக் கட்டினார்; அம்மாதாவுக்கு 'அடைக்கல மாதா' எனப் பெயரிட்டார்; அத் திருத்தாயின் காவலில் அமைந்த ஊருக்குத் '**திருக்காவலூர்**' எனப் பெயர் வழங்கினார்; அவ்வூரின் வளத்தையும் அம்மையின் சிறப்பையும் அடியார் உணர்ந்துகொள்ளத் **திருக்காவலூர்க் கலம்பகம்** என்னும் சிறு நூல் ஒன்றைப் பாடினார்.

5. முனிவர் தமிழ் உரை நடையையும் வளர்த்தனர். அவர் கிறிஸ்துவ மதபோதகர்க்காக ஓர் உரைநடை நூலை எழுதினார். அதன் பெயர் **வேதியர் ஒழுக்கம்** என்பது. முனிவர் நகைச்சுவை நிரம்பிய 'பரமார்த்த குரு கதை' முதலிய கதைகளையும் தமிழ் உரைநடையில் வரைந்தார்; சமயத் தொடர்பான நூல்கள் சிலவும் எழுதினார்.

6. நமது முனிவர் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இலக்கணங்களையும் படித்துத் தேறி, ஓர் இலக்கண நூலைச் செய்து முடித்தார்; அதற்குத் **தொன்னூல் விளக்கம்** எனப் பெயரிட்டார். அந்நூல் மேற்சொல்லப்பட்ட ஐந்து இலக்கணங்களையும் பற்றிப் பேசுகிறது. முனிவர் இத்துடன் நிற்கவில்லை. அவர் பேச்சுத் தமிழைப் பற்றியும் ஏட்டுத் தமிழைப் பற்றியும் இரண்டு தனி நூல்களை இலத்தீன் மொழியில்

எழுதினுர். அவை ஆங்கிலப் பாதிரிமார்களால் படிக்கப்பட்டு வருகின்றன.

7. வீரமாமுனிவர் திருக்குறளைப் பழுதறப் படித்த அறிஞர். அவர் அதன் பொதுத் தன்மையை நன்கு உணர்ந்தார்; அதன் சிறப்பினைத் தம் நாட்டவர் அறிய வேண்டும் என்னும் கருத்தால் அதன் முதல் இரண்டு பகுதிகளையும் இலத்தீனில் மொழி பெயர்த்தார்.

8. வீரமாமுனிவர்க்கு முற்பட்ட காலத்தில் தமிழ் அகராதிகள் செய்யுள் நடையில் இருந்தன. அவை திவாகரம், பிங்கலம், சூடாமணி எனப் பெயர் பெற்றிருந்தன. அவை செய்யுள் நடையில் அமைத்து இருந்தமையால், சாதாரண மக்களுக்குப் பயன்படவில்லை. எல்லோரும் தமிழ்ச் சொற்களையும் பொருளையும் எளிதாக உணர, அகர வரிசையில் சொற்களை அமைப்பது ஏற்றது என்ற எண்ணம் முனிவர்க்கு உண்டானது. அவர் அந்த முறையைப் பின்பற்றிச் **சதுர் அகராதி** என்னும் பெயரால் தமிழ் அகராதி நூலை வெளியிட்டார்.

9. வீரமாமுனிவர் இத்தாலிய நாட்டினர்; சமயப் பிரசாரத்திற்காக நமது நாட்டிற்கு வந்தவர். அவர் சிறிதளவு தமிழைக் கற்றுத் தம் சமயப் பிரசாரத்தை நடத்தி மறைந்திருக்கலாம். ஆயின், அவர் அவ்வாறு செய்யவில்லை; தம் பெயர் என்றும் நிலைத்திருக்கத் தக்க முறையில் நமது தாய் மொழிக்குப் பல வழிகளில் தொண்டு செய்துள்ளார். அவருடைய நூல்களைப் படித்த பின்னரே மேனுட்டார் நமது தமிழின் பழைமையையும் பெருமையையும், உணரத் தொடங்கினர். வேற்று நாட்டுத் துறவியார் நம் மொழிக்குச் செய்த தொண்டினைப்

பாராட்டுவது நமது கடமையாகும். தமிழராகிய நாம் நமது தாய் மொழிக்கு மேலும் மிகுதியாகத் தொண்டு செய்ய வேண்டும் என்பதை வீரமா முனிவரது தமிழ்ப்பணி நினைவூட்டுகின்றது அன்றோ?

### அருஞ்சொற்பொருள்

தக்கார் - தகுதி உடையவர். புலமை - அறிவு. உரை நடை-வசனம். துறவு-சந்நியாஸம். ஏசு சங்கம்- Society of Jesus (S.J.). தேம்பாவணி - தேம்பா+அணி - வாடாதமாலை. சிந்தாமணி - சீவகன் வரலாற்றைக் கூறும் பெரிய செய்யுள் நூல். காவியம் - பல குணங்களால் உயர்ந்த ஒருவனது வர லாறு கூறும் நூல். எழுந்தருளச் செய்தார் - நிறுவினர். சிற் றூர் × பேரூர். கலம்பகம்-பலவகைப்பட்ட நூறு செய்யுட்களைக் கொண்ட ஒரு நூல். வேதியர்-பாதிரிமார். தொன்னூல் - பழைய நூல். பொருள் - அறம், பொருள், இன்பம், வீடு என் னும் நான்கையும் பற்றிய இலக்கணம். யாப்பு-செய்யுள் இலக்கணம். அணி - அலங்கார சாத்திரம். பொதுத்தன்மை- எல்லா நாட்டவர்க்கும் பொதுப்பட்ட நீதிகளைக் கூறுந் தன்மை. திருக்குறளின் மூன்று பகுதிகள் - அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால். அகராதி - அகரம் முதலிய எழுத்துக்களை முதலாகக் கொண்ட சொற்களும் அவற்றின் பொருளும் இவை என உணர்த்தும் நூல் (Dictionary).

### கேள்விகள்

1. மேனாட்டுப் பாதிரிமார் செய்துள்ள தமிழ்த்தொண்டு யாது?
2. 'தேம்பாவணி' என்பது யாது? அதன்சிறப்பு யாது?
3. 'திருக்காவலூர்க் கலம்பகம்' எவ்வாறு உண் டானது?
4. முனிவர் வரைந்த தமிழ் உரைநடை நூல்கள்எவை?
5. முனிவர்செய்த இலக்கண நூல்கள் எவை?
6. அவர் திருக்குறளுக்குச் செய்த தொண்டு யாது?
7. சதுர் அகராதி என்பது யாது?
8. முனிவரது வரலாறு உங்களுக்கு உணர்த்துவது யாது?

### பயிற்சி

1. உரைநடை-வசனம்: இவை ஒரே பொருளில் வரும் சொற்கள். வரைதல்-எழுதுதல்.

இவற்றை நினைவில் வையுங்கள். இவற்றைப்போல ஒரே பொருளில் வரும் வேறு சொற்கள் நான்கினைக் கூறுக.

2. உலகறிய, கருத்துக்கள், சிற்றூர், நகைச் சுவை, சிறிதளவு, பொதுத் தன்மை, சமயத் தொடர்பான — இவற்றைப் பிரித்துக் காட்டுக.

3. பொருத்தமான எழுவாய் - பயனிலை - செயப்படு பொருள்களைச் சேர்த்துக் கூறுக:—

| | | |
|---|---|---|
| (1) முனிவர் | வெளியிட்டார் | திருக்குறட் கருத்துக்களை |
| (2) முனிவர் | வருந்திக் கற்றார் | அகராதி நூலை |
| (3) முனிவர் | ஆண்டுள்ளார் | தமிழ் இலக்கண இலக்கியங்களை |

4. (1) அது வீடு அன்று-இவ்வாறு 'அன்று' என்பது ஒன்றன்பால் வினைமுற்றாக வரும்.

(2) அவை வீடுகள் அல்ல—இவ்வாறு 'அல்ல' என்பது பலவின்பால் வினைமுற்றாக வரும்.

இதனை நினைவிற்கொண்டு கீழ்வரும் கோடிடப்பட்ட இடங்களில் தக்க வினைமுற்றுக்களை அமைத்துக் கூறுக:—

(1) அது குதிரை ——. (அன்று, அல்ல)
(2) அவை குதிரைகள் ——. ( )
(3) இது எனது புத்தகம் ——. ( )
(4) அவை உன் புத்தகங்கள் ——.( )

5. (1) மரம், நரம்பு—இவற்றில் வந்துள்ள ரகரத்தை உச்சரியுங்கள். மேல் வாயை நாவின் நுனி தடவ ர பிறக்கும்.

(2) அறம், பறவை—இவற்றில்வந்துள்ள றகரத்தை உச்சரியுங்கள். மேல் வாயை நாவின் நுனி மிகப்பொருந்த, ற, பிறக்கும்.

இவை இரண்டும் உச்சரிப்பில் வேறுபடுதல் போலவே பொருளிலும் வேறுபடும். சில உதாரணங்களைக் கீழே கவனியுங்கள்.

| ர | ற |
|---|---|
| அரம்-ஒரு கருவி | அறம்-தருமம் |
| இரை-உணவு | இறை-தலைமை, வரி |
| குரவர்-ஆசிரியர், பெரியார் | குறவர்-ஒரு சாதியார் |
| கூரிய-கூர்மையான | கூறிய-சொன்ன |
| விரல்-(கை, கால்) விரல் | விறல்-வலிமை, திறமை |

முதல் ஐந்து பாடங்களிலிருந்து, ர, ற வந்துள்ள சொற்களுள் நந்நான்கு எடுத்துக் காட்டுக.

## 6. ஓவியக்கலை

1. மனிதனது உள்ளத்தில் ஊறிப் பெருக்கெடுத்து வெளிப்படும் ஆற்றலின் பயனே ஓவியம், சிற்பம் இசை, நடனம் எனப் பலவகையாகக் கூறப்படும். இவை **நுண்கலைகள்** எனப்படும். இவற்றைப் போற்றி வளர்க்கும் நாடுகளே நாகரிக நாடுகள் என்று பெயர் பெறும். இந்தியா பல ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகவே இக்கலைகளில் சிறப்புற்ற நாடு என்பதைப் புதை பொருள் ஆராய்ச்சியாலும் அறியலாம். இந்தியர் தொடர்ந்து இக் கலைகளை வளர்த்து வந்தனர் என்பதைக் குப்தர்—பல்லவர்—சோழர்—விஜயநகர அரசர் முதலியவர் அமைத்த கோவில்களில் உள்ள ஓவியங்களைக் கொண்டும் சிற்பங்களைக் கொண்டும் அவர் கால இலக்கியம் கொண்டும் நன்கு தெரியலாம்.

2. உலகத்துப் பொருள்களையும், நூல்களில் வரையப்பட்டு இன்று காணப்படாத நிலையில் உள்ள பொருள்களையும் காட்சிகளையும் நுண்ணுணர்வால் சிந்தித்துக் கண்ணையும் கருத்தையும் கவரத்தக்க சித்திரங்களாக வரையும் கலையே **ஓவியக்கலை** எனப்படும். இக்கலைஞர் தம் நாட்டு இலக்கியத்தில் பொதுப் பயிற்சியும் ஓவியக்கலையில் சிறப்புப் பயிற்சியும் பெற்றிருந்தாற்றான், அவர் வரையும் ஓவியங்கள் கண்ணையும் கருத்தையும் ஈர்க்கத் தக்கவையாக இருக்கும். அவ்வோவியங்கள் **உயிர் ஓவியங்கள்** எனப் பெயர் பெறும். நம் இந்திய ஓவியர் ஓவியக்கலையிற் பண்பட்ட புலவர். அதனாற்றான் அவர் வரைந்த ஓவியங்கள் பல

நூற்றுண்டுகளுக்குப் பின்னும் நமது உள்ளத்தைத் தம்பால் இழுக்கின்றன.

3. *அஜாந்தா* ஓவியங்கள் உலகப் புகழ் பெற்றவை. நிஜாம் நாட்டின் வடகோடியில் பரத்பூர் என்னும் சிற்றூர்க்குத் தென்மேற்கில் நான்கு கல் தொலைவில் அஜாந்தா என்னும் குன்றுகள் இருக்கின்றன. அவற்றுக்கு அருகில் பகோரா என்னும் ஆறு பாய்கின்றது. இருபத்தொன்பது குன்றுகளில் கோவில்கள் குடையப்பட்டுள்ளன. அவை ஆற்று நீர்மட்டத்திற்கு நூறடி உயரத்தில் குடையப்பட்டுள்ளன. அக்குகைகளில் உள்ள சிற்ப—ஓவிய வேலைப்பாடுகளைக் கொண்டு, அவை நான்கு வெவ்வேறு காலங்களில் அமைக்கப்பட்டவை என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

4. அஜாந்தாக் குகைக் கோவில்கள் அனைத்தும் பௌத்த சமயத் துறவிகள் பயன்படுத்தி வந்தவை. அங்குள்ள ஓவியங்களை விளக்கிக் கூற வேண்டுமாயின், தனி நூல் ஒன்றே எழுத வேண்டும். அவை புத்தரைப்பற்றிய கதைகளையும் அவருடைய பல பிறவிகளைப்பற்றிக் கூறும் நிகழ்ச்சிகளையும் விளக்குவனவாக இருக்கின்றன. குகைகளின் முகட்டில் நீர்க் கொடிகளையும் மலர்களையும் பறவைகளையும் உணர்த்தும் ஓவியங்கள் காட்சி அளிக்கின்றன. தூண்களில் தனி மனிதர் உருவங்களும் விலங்குகளின் வடிவங்களும் பேரழகுடன் பொலிகின்றன. புத்தரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் காட்டும் ஓவியங்கள் சுவர்களில் பரவிக் கிடக்கின்றன. புத்தர் வரலாற்றையும் அவருடைய ஜாதகக் கதைகளையும் நன்கு படித்தவரே இந்த ஓவியங்கள் குறிப்பவற்றை எளிதில் உணர்தல் கூடும்.

5. ஏறத்தாழக் கி. பி. ஏழாம் நூற்றுண்டில் வரையப்பட்டவை என்று கூறத்தக்க அஜாந்தா ஓவியங்களுள் இரண்டைக் கீழே காண்க. ஒன்றில் தாயும் சேயும் எவ்வளவு அழகுடன் காட்டப்பட்



டுள்ளனர்! இவ்வோவியத்தைக்கொண்டு, அக் காலப் பெண்மணிகளின் கூந்தல் ஒப்பனை, அணி விசேடம், ஆடைச் சிறப்பு என்பவற்றையும் இவை அனைத்திற்கும் மேலாக அக்கால ஓவியர் பெற் றிருந்த கலைத்திறனையும் நன்கு உணரலாம் அல்லவா? இரண்டாம் படத்தில் உள்ள குரங்கு களின் ஓவியங்களைக் காண்க. தாய்க்குரங்கைக் குட்டி எவ்வளவு உறுதியாகவும் அழகாகவும் பிடித் துக் கொண்டுள்ளது! குரங்குகளின் கால்கள், வால் கள், முகம், காது முதலியன எவ்வளவு தெளிவாக வும் அழகாகவும் தீட்டப்பட்டுள்ளன!

6. நமது தமிழ் நாட்டில் கி. பி. ஏழாம் நூற் றுண்டில் வரையப்பட்ட சித்தன்னவாசல் ஓவியங்

கள் உலகப் புகழ் பெற்றவை. அவற்றுக்குப் பிறகு கி. பி. 11-ஆம் நூற்றாண்டில் வரையப்பட்ட சோழர் கால ஓவியங்கள் தஞ்சைப் பெரிய கோவிலில் இருக்கின்றன. கருவறையின் புறச்சுவர்களில் அவை தீட்டப்பட்டன. அவற்றுள் சிறந்தவை சுந்தரர் வரலாற்றைப்பற்றிய ஓவியங்களே ஆகும்.



சுந்தரர் யானைமீது செல்லுதல்

7. ஒரு பக்கத்தில் சுந்தரரைச் சிவபெருமான் கிழவேதியராக வந்து அடிமை ஓலை காட்டி, அவரது திருமணத்தைத் தடை செய்து, அவரை ஆட்கொண்ட வரலாற்றைக் குறிக்கும் ஓவியம் வரையப்பட்டுள்ளது. மண மண்டபத்தில் மணத்தைக் கண்டு களிக்கப் பலர் கூடியிருக்கின்றனர். சிவபெருமான் கிழ வேதியராக ஒரு கையிற் குடையும் மற்றொரு கையில் ஓலையும் தாங்கிச் சுந்தரர்க்கு

எதிரில் நிற்கிறார்; சுந்தரர் அவரை வியப்புடன் நோக்குகிறார்; பின்புறம் திருவெண்ணெய் நல்லூர்க் கோவில் காட்டப்பட்டுள்ளது.

8. மற்றொரு பக்கத்தின் மேற்பகுதியில், திருக் கயிலாய மலையில் சிவபெருமான், முனிவரும் பிறரும் சூழ இருக்கும் காட்சி காணப்படுகிறது. அடிப் பகுதியில், சுந்தரர் வெள்ளையானைமீதும், அவர் நண்



பரும் சேரநாட்டு அரசருமான சேரமான் பெருமாள் குதிரைமீதும் அமர்ந்து கயிலை நோக்கிச் செல்லும் காட்சி காணப்படுகிறது. இந்த ஓவியங்களைப் படங்களிற் பாருங்கள். கரியும் பரியும் எவ்வாறு அலங்கரிக்கப்பட்டுள்ளன! இவ்வாறு கரியையும் பரியையும் அழகு செய்தல் அக்கால வழக்கம் என்பதை இவ்வோவியங்கள் உணர்த்துகின்றன. சுந்தரர்க்கும் சேரமானுக்கும் தலையில்

கொண்டை, தாடி இருக்கின்றன; கை மார்பு முதலிய இடங்களில் அணிகள் காணப்படுகின்றன. சுந்தரரும் சேரமானும் கி. பி. 9-ஆம் நூற்றாண்டினர்; ஆயினும், அவர்கள் இவ்வாறு இருந்தனர் என்பதைக் காட்டும் இப்பிற்கால ஓவியங்கள், சோழர் கால மக்கள் சுந்தரரையும் சேரமானையும் பற்றிக் கொண்டிருந்த கருத்தை உணர்த்துவன வாகும். இவை சோழர் கால உடைச் சிறப்பையும், அணிச் சிறப்பையும், தலையலங்காரத்தையும், நமக்கு உணர்த்துவனவாகவும் கொள்ளலாம்.

9. சுந்தரர் கயிலைக்குச் சென்ற பொழுது பதிகம் பாடிக்கொண்டு சென்றார் என்பது வரலாறு. ஓவியர் அதனை உளத்திற்கொண்டு, சுந்தரர் கைகளில் தாளம் கொடுத்திருத்தல் கவனிக்கத்தக்கது. இவ்வாறு கயிலை நோக்கிச் செல்லும் அடியார் இருவரையும் கணநாதர்கள் ஆடிப்பாடி வரவேற்பது போல ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன.

### அருஞ்சொற்பொருள்

நுண்கலை - நுட்பமான கலை. போற்றி - சிறப்பித்து. ஈர்க்க-இழுக்க, தம் வசப்படுத்த. பண்பட்ட-அனுபவப்பட்ட. தம்பால் - தம்மிடம். சேய் - குழந்தை, பிள்ளை. ஒப்பனை - அலங்காரம். விசேடம் - சிறப்பு. திறம் - சாமர்த்தியம்.

### கேள்விகள்

1. நுண்கலைகள் எவை?
2. இந்தியர் நுண்கலைகளைத் தொடர்ந்து வளர்த்து வந்தனர் என்பதை எவற்றால் அறியலாம்?
3. ஓவியக்கலை என்பது யாது?
4. உயிர் ஓவியங்கள் எவை?
5. அஜந்தா - குன்றுகள் எங்கு இருக்கின்றன?
6. குகைகளிற் காணப்படும் பலவகை ஓவியங்கள் எவை?

7. படத்திற் காட்டப்பட்டுள்ள ஓவியங்களைக்கொண்டு நீங்கள் அறிவன யாவை?

8. சோழர் கால ஓவியங்கள் தெரிவிப்பன யாவை?

9. இவ்வோவியங்களைப் பார்க்கும்பொழுது உங்களுக்குத் தோன்றும் எண்ணங்கள் எவை?

## பயிற்சி

1. ஆராய்ச்சி, நுண்கலை, வெவ்வேறு, பண்பட்ட, நிகழ்ச்சி, பேரழகு, ஒப்பனை—இவற்றை உங்கள் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.

2. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துக் கூறுக:—

(1) கருவறையின் புறச் —— அவை ——.

(2) மணமண்டபத்தில்——க் கண்டு——ப் பலர்—.

3. அணி+சிறப்பு, நூறு+அடி, பொது+பயிற்சி, ஓவியம்+கலை, நாடு+அரசர், மணம்+ஐ, மனம் + ஐ—சேர்த்துப் படியுங்கள்.

4. (1) கலம், நிலம்—இவற்றில் உள்ள ல கரத்தை உச்சரித்துப் பாருங்கள். மேல்வாய்ப் பல்லின் அடியை நாவின் ஓரம் தடித்துப் பொருந்த, ல பிறக்கும்.

(2) குளம், அளம்—இவற்றில் உள்ள ள கரத்தை உச்சரித்துப் பாருங்கள். மேல்வாயை நாவின் ஓரம் தடித்துத் தடவ, ள பிறக்கும்.

(3) பழம், வழ வழ—இவற்றில் உள்ள ழ கரத்தை உச்சரித்துப் பாருங்கள். மேல்வாயை நாவின் நுனி சிறிது அழுத்தமாகத் தடவ, ழ பிறக்கும்.

இம்மூன்றும் இவ்வாறு உச்சரிப்பில் வேறுபடுதல் போலவே பொருளிலும் வேறுபடும். சில உதாரணங்களைக் கீழே பாருங்கள்.

| ல | ள | ழ |
|---|---|---|
| அலை-அலை(தல்) | அளை-பிசை | அழை-கூப்பிடு |
| கலை-ஆடை | களை-நீக்கு, களை(ப்பு) | கழை-கரும்பு, மூங்கில் |
| வலி-வலிமை, நோதல் | வளி-காற்று | வழி-பாதை |
| விலை- | விளை-பயிராக்கு | விழை-விரும்பு |

இவ்வாறு வரும் சொற்களை முதல் ஆறு பாடங்களிலிருந்து வகைக்கு நான்கு தருக.

# 7. பிரிட்டிஷ் பெண்கள்*

1. இங்கிலாந்து, ஸ்காட்லந்து, வேல்ஸ் என்னும் மூன்று நாடுகளும் சேர்ந்த நிலப்பகுதி 'பிரிட்டன்' எனப்படும். அங்கு வாழ்பவர் 'பிரிட்டிஷ் மக்கள்' எனப்படுவர். அவருள் பெண் பாலரையே நாம் 'பிரிட்டிஷ் பெண்கள்' என்று அழைக்கிறோம். அப்பெண்களுடைய கல்வி, மண வாழ்க்கை, பலதுறை அலுவல்கள், குண நலங்கள்



இவற்றைப்பற்றிய விவரங்களை இங்குக் காண் போம்.

2. ஆணைவிடப் பெண் இழிந்தவள் என்னும் மனப்பான்மை இப்பொழுது பிரிட்டனில் இல்லை. அதனால் ஆடவன் மேற்கொள்ளும் எல்லாத் துறை களையும் பெண் மேற்கொண்டு செயலாற்றுகின் றாள். ஐந்து ஆண்டு முதல் பதினாறு ஆண்டுவரை கட்டாயக் கல்வி முறை பிரிட்டனில் இருப்பதால்,

*இது, உலகம் சுற்றிய தமிழராகிய திருவாளர்—சோம. லெ. இலக்குமணச் செட்டியார். B. A. அவர்கள் வரைந் துள்ள 'பிரிட்டிஷ் பெண்கள்' என்னும் கட்டுரையை, ஆசிரி யர் இசைவு பெற்றுத் தழுவி எழுதப்பட்டது.

பிரிட்டிஷ் பெண்கள் இளமையிற் கட்டாயக் கல்வி பெறுகின்றனர். பெண்களுக்குரிய கல்வித்திட்டத்தில் மடைத்தொழில், தையல், பின்னல், வீட்டையும் வீட்டுப் பொருள்களையும் தூய்மையாக வைத்திருத்தல், தோட்ட வேலை, குடும்ப வரவு-செலவுக் கணக்கு முதலியவை சிறப்பாகக் கற்பிக்கப்படுகின்றன.

3. பெண் ஏறத்தாழத் தனது இருபத்தோராம் ஆண்டில் ஓர் ஆடவனை மணந்துகொள்கிருள். அவள் மணத்திற்கு முன் ஒருவருட காலம் அவனுடன் பழகி, அவனுடைய குற்றங் குறைகளை நன்கு உணர்ந்த பின்னரே அவனை மணக்கின்ருள். ஆதலின், அவளது மணவாழ்க்கை பெரும்பாலும் இன்ப வாழ்க்கையாகவே கழிகின்றது. மேலும் மணம் நடந்த பிறகு அவள் தன் கணவனுடன் தனி இல்லத்தில் தன் புதிய வாழ்வைத் தொடங்குகிருள். அதனுல் குடும்பப்பொறுப்பு முழுதும் அவளைச் சாருகிறது. அவள் இளமையில் குடும்பக் கலையில் நன்கு பயிற்சி பெற்றவள் ஆதலால், தன் புதிய குடும்பத்தைத் திறம்பட நடத்தி வாழ்க்கையில் வெற்றி பெறுகின்ருள்.

4. பெண்கள் இங்ஙனம் வீட்டு வேலைகளைக் குறைவறச் செய்துகொண்டே பல அலுவலகங்களிலும் வேலை செய்கின்றனர். பெண்கள் அரசாங்க அலுவலகங்களிலும் வேலை பார்க்கின்றனர்; தொழிற்சாலைகளில் வேலை செய்கின்றனர்; உணவுச் சாலைகளிலும் அலுவலராய் இருக்கின்றனர்; மருத்துவ மனைகளில் தாதிமாராகவும், மருத்துவராகவும், பள்ளிகளில் ஆசிரியராகவும் பணி புரிகின்றனர். கடைகளில் பண்டங்களை விற்கும் வேலை

யாட்களில் பலர் பெண்களே யாவர். பெரிய அலுவலகங்களில் டெலிபோன் இயக்குதலும், கடிதங்கள் வரைதலும், செயலாளர் வேலையும் அவர்கட்கே உரிய வேலைகள் ஆகும். முடி திருத்தும் அகங்களில் விரல் நகம் வெட்டும் வேலை பெண்களைச் சேர்ந்தது. அஞ்சல் அகங்களில் பெண்கள் பலராக வேலை பார்க்கின்றனர்; பஸ் கண்டக்டர் வேலையிலும் பலர் இருக்கின்றனர்.

5. இவை அனைத்திற்கும் மேலாகப் பெண்கள் பொது வாழ்விற் புகுந்து பணி செய்கின்றனர். பிரிட்டிஷ் தொழிற் கட்சிக்குப் பெண்களிடமே மிகுந்த செல்வாக்கு இருந்துவருகின்றது. பிரிட்டிஷ் தொழிற் சங்கத்துத் தலைவராக அம்மையார் ஒருவர் இரண்டு ஆண்டுகட்கு முன் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பது கவனிக்கத்தக்கது. பாராளுமன்றத்திலும் பெண்கள் உறுப்பினராய் இருந்து வருகின்றனர். இரண்டு ஆண்டுகட்கு முன், இலண்டன் நகராண்மைக் கழக மேயராக மாதரசியார் ஒருவர் இருந்தார்.

6. பிரிட்டிஷ் மாது காலையில் எழுந்து தன் வீட்டு வேலைகளைச் செவ்வனே செய்து முடிக்கிருள்; மின்சார சக்தியின் உதவியால் விரைவில் சமையல் செய்கிருள்; தன் கணவனுடனும் மக்களுடனும் காலை உணவை உட்கொண்டு, தன் அலுவலகத்திற்குச் செல்கிருள்; அங்குள்ள உணவுச் சாலையில் பகலுணவைப் பெறுகிருள்; மாலையில் வீடு திரும்பியதும் இரவு உணவைத் தயாரிக்கிருள். கணவனும் பகலுணவைத் தன் அலுவலகத்திற் சாப்பிடுகிருன். பிள்ளைகள் தாம் படிக்கும் பள்ளிகளில், அரசாங்க ஏற்பாட்டின்படி,

இலவசமாகப் பகல் உணவு பெறுகின்றனர். கட்டணமின்றிப் பள்ளிக்கும் வீட்டிற்கும் நகராண்மைக் கழக ஊர்திகளில் செல்ல அப்பிள்ளைகளுக்கு வசதி இருக்கின்றது.

7. பிரிட்டிஷ் ஆடவன் தன்னைத் தன் மனைவியினும் மேலானவனாக நினைப்பதில்லை; அவள் தன் உடம்பின் ஒரு பகுதி என்றே கருதுகிறான். அதனால் அவன் அவளுக்கு அவள் வேலைகளில் துணை புரிகின்றான்; அவளுடன் ஒற்றுமையோடு வாழ்கின்றான். கணவனது இத்தகைய ஒத்துழைப்பினாலும் அரசாங்கம் செய்துள்ள பொதுநலத் திட்டங்களாலும் பிரிட்டிஷ் மாது நாள்தோறும் பதினாறுமணி நேரம் வேலை செய்கின்றாள். அவள் தன் வேலைகளைக் குறித்த காலத்திற் குறித்தபடி செய்து முடிக்கிறாள். ஒரு நிமிட நேரத்தையும் வீணாக்காமல் பயனுடையதாகச் செய்வதில் பிரிட்டிஷ் மாது நன்கு பழகியிருக்கிறாள்.

8. பிரிட்டிஷ் மாதர் நாட்டுப்பற்றில் மிகச் சிறந்தவராவர்; போர்க் காலத்தில் பல இடையூறுகளைப் பொறுத்து அரசாங்கத்தார் ஆணைப்படி நடந்தனர்; தம் கணவரையோ, பிள்ளைகளையோ போர்க்களத்திற்கு மகிழ்ச்சியோடு அனுப்பினர். அக்காலத்தில் இலண்டனில் சர்க்கரைப் பஞ்சம் ஏற்பட்டது. 'சர்க்கரை வரும் வரையில், மிகுதியாக வைத்திருப்பவர் பங்கீட்டுக் கடைகளிற் கொடுத்துச் சீட்டைப் பெற்றுக்கொள்ள வேண்டும்; சர்க்கரை வந்தவுடன் அவரவர் கொடுத்த அளவுப்படி சர்க்கரை திருப்பிக் கொடுக்கப்படும்,' என்று பங்கீட்டு அதிகாரிகள் அறிவித்தனர். உடனே ஆயிரக்கணக்கான மாதர் தம்மிடம் மிகுதியாக

இருந்த சர்க்கரையைக் கொடுக்கப் பங்கீட்டுக் கடைகளின்முன் வரிசை முறையிற் கட்டுப்பாடாகக் காத்திருந்தனர். இத்தகைய மாதரைப் பெற்ற நாடன்றோ மேனிலையை அடையும்!

9. ஆணும் பெண்ணும் தத்தம் கடமைகளில் வழுவாது நடந்தால்தான் அவ்விருவரால் நடத்தப்படும் குடும்பம் செம்மையாக நடைபெறும். அது போலவே ஒரு நாட்டு ஆடவரும் பெண்டிரும் தம் அரசாங்கத்தின் சட்ட திட்டங்கட்கு உட்பட்டு நடந்து அரசாங்கத்துடன் ஒத்துழைத்தாற்றான், அந்நாடு ஆட்சி முறையிலும் பிறவற்றிலும் மேனிலையை அடைதல் கூடும். எனவே, குடும்பத்திலும் சமூகத்திலும் மாதர் கடமை, ஆடவர் கடமையைப்போன்றே பாதி அளவு இருக்கின்றது. இக்கடமையை உணர்ந்து நடப்பதில் பிரிட்டிஷ் மாதர் தலைசிறந்தவர் என்று கூறுதல் தவறாகாது.

### அருஞ்சொற்பொருள்

இழிந்தவள்-தாழ்ந்தவள். மடை-சமையல். அலுவல்-வேலை. பணி-வேலை. முடிதிருத்தும் அகம்-க்ஷவரக்கடை. அஞ்சலகம்-தபால் நிலையம். பணி-தொண்டு. இன்றி-இல்லாது. பொது நலத்திட்டங்கள்-பிள்ளைகட்குப் பகல்உணவு இலவசமாக அளித்தல், கட்டாயக்கல்வி அளித்தல், இலவசமாகப் பிள்ளைகள் ஏறிச்செல்ல ஊர்திகளை உதவுதல் முதலியன. இடையூறு-துன்பம். வழுவாது-தவறாமல். செவ்வையாக, செம்மையாக—ஒழுங்காக.

### கேள்விகள்

1. 'பிரிட்டிஷ் பெண்கள்' என்னும் தொடர் யாரைக் குறிப்பது?
2. கட்டாயக் கல்வி முறை என்பது யாது?
3. பெண்களுக்குரிய கல்வித் திட்டத்தின்படி சிறப்பாகக் கற்பிக்கப்படுவன யாவை?
4. பெண்கள் பார்க்கும் வேலைகள் எவை?
5. பொது வாழ்வில் பிரிட்டிஷ் பெண்கள் பெற்றுள்ள தகுதி யாது?

6. பிரிட்டிஷ் மாது செய்யும் ஒரு நாளைய வேலைகள் எவை?

7. "இத்தகைய மாதரைப் பெற்ற நாடன்றோ மேனிலையை அடையும்!"—சந்தர்ப்பம் கூறி இதனை விளக்குக.

8. "இக்கடமையை உணர்ந்து நடப்பதில் பிரிட்டிஷ் மாதர் தலை சிறந்தவர்."—அக்கடமை யாது?

## பயிற்சி

1. குற்றங் குறை, வரவு செலவு, இன்ப துன்பம், இலாப நஷ்டம், இரவு பகல்—இவ்வாறு வரும் தொடர்களை நினைவில் வைத்து, இவற்றை இடமறிந்து கட்டுரையில் எழுதப் பழகுக.

2. அலுவலகம், மடைத்தொழில், கல்வித்திட்டம், மேற்கொண்டு, நினைப்பதில்லை, ஒத்துழைப்பு, அவ்விருவர்—இவற்றைப் பிரித்துக் காட்டுக.

3. நாடு+பணி, வீடு+வேலை, காடு + வாழ்க்கை, வயிறு+வலி, மணம்+வாழ்க்கை, உணவு+சாலை.—இவற்றைச் சேர்த்துக் கூறுக.

4. (1) நகம், கந்தன்—இவற்றில் வந்துள்ள ந கரத்தை உச்சரித்துப் பாருங்கள். மேல்வாய்ப் பல்லின் அடியைநாவின் நுனி பொருந்த, ந பிறக்கும்.

(2) கனவு, கன்று—இவற்றில் வந்துள்ள ன கரத்தை உச்சரித்துப் பாருங்கள். மேல்வாயை நாவின் நுனி மிகப் பொருந்த, ன பிறக்கும்.

(3) மணம், சணல்—இவற்றில் வந்துள்ள ண கரத்தை உச்சரியுங்கள். மேல்வாய் நுனியை நாவின் நுனி சேர, ண பிறக்கும்.

இவை மூன்றும் இங்ஙனம் உச்சரிப்பில் வேறுபடுதல் போலவே பொருளிலும் வேறுபடும். சில உதாரணங்களைக் கீழே கவனியுங்கள்.

| ன | ண |
|---|---|
| மனம் | மணம் |
| ஆனை | ஆணை |
| கனி-பழம் | கணி-சோதிடன் |
| மனை-வீடு | மணை-நாம் உட்காரும் மரப்பலகை. |

இவ்வாறு வரும் சொற்களை முன் பாடங்களிலிருந்து வகைக்கு நான்கு எடுத்துக் காட்டுக.

## 8. பண்டைப் பெருவணிகர்

### (*பெனிஷியர்*)

1. ஆப்பிரிக்காக் கண்டத்தில் உள்ள **எகிப்து** என்னும் நாடு உலகப் புகழ் பெற்ற பழைய நாடாகும். அது கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே நாகரிகத்திற் சிறந்து விளங்கியது. கட்டடக்கலை, கணிதம், வானசாத்திரம் முதலிய பல கலைகளும் அங்கு வளர்ச்சி பெற்றன. அக்கால எகிப்தியர் எழுதவும் அறிந்திருந்தனர். எகிப்தியருடைய கலைகளை ஐரோப்பாவிற் பரவச் செய்தவர் ***பெனிஷியர்*** என்ற வணிகர் கூட்டத்தார்.

2. மத்தியதரைக் கடலின் கிழக்கே உள்ள *சிரியா* நாட்டின் கரையோரப் பகுதிகளில் பெனிஷியர் வாழ்ந்து வந்தனர். தங்கள் துறைமுக நகரங்களிலிருந்து அவர்கள் எகிப்து, கிரீட், கிரீஸ், இத்தாலி என்னும் நாடுகளுடன் கடல் வாணிகம் செய்தனர்; பின்னர் அதுகாறும் வேறு எவ்வணிகரும் சென்று பாராத பிரிட்டிஷ் தீவுகளையும் சென்று கண்டனர்; ஆங்கிலேயருடன் வாணிகம் செய்யவும் முற்பட்டனர். படத்தைப் பாருங்கள்.

3. பெனிஷியர் போரை விரும்பாதவர்; எனினும், தம்மையும் தமது நாட்டையும் பகைவரிடமிருந்து காப்பதில் வீரர்; கடல் கடந்து பல நாடுகளுக்குச் சென்று வாணிகம் செய்து பொருளீட்டி இன்ப வாழ்வு வாழ்வதையே விரும்பினர். இவ்வுயர்ந்த மனப்பான்மை இன்றைய மக்களுக்கு இருக்குமாயின், உலகில் போர் உண்டாக இடம் இராது அன்றோ?

4. பெனிஷியர் தாம் சென்ற நாடுகளுக்கெல்

லாம் தங்கள் ஆடை அணிகளையும், தாங்கள் வளர்த்து வந்த கலைகளை உணர்த்தும் பொருள் களையும் எடுத்துச் சென்றனர். நீண்ட அங்கிகளை யும் ஆட்டு மயிராலான உடைகளையும் அணிந்து வந்த கிரேக்கர், பெனிஷியர் அணிந்திருந்த



பெனிஷியர் ஆங்கிலேயருடன் வாணிகம் செய்தல்

குட்டைச் சட்டைகளைப் பார்த்து வியப்புற் றனர் ; அச்சட்டைகள் தயாரிக்கும் முறையைப் பெனிஷியரிடமிருந்து கற்றனர். நெசவு, ஆடை களில் சித்திரங்களைப் பதித்தல், காகிதம் செய்தல், கண்ணாடிப் பொருள்களைச் செய்தல், உலோகங் களைத் தகடாக்கிப் பல பொருள்களைச் செய்தல், அவற்றின்மேல் சித்திரங்களைப் பொறித்தல் முதலி யன எகிப்தியர் செய்துவந்த தொழில்கள் ஆகும். பெனிஷியர் இவற்றை எகிப்தியரிடமிருந்து கற் றனர் ; இவற்றைத் தயாரித்து, அயல் நாடுகளுக்

குச் சென்று விற்றுவந்தனர். அவர்தம் பொருள்களின் வேலைப்பாட்டைக் கண்டு வியந்த கிரேக்கர், தம் பிள்ளைகளைப் பெனிஷியர் தொழிற்சாலைகளுக்கு அனுப்பித் தொழில் திறமையைக் கற்றுக் கொண்டனர். பின்னர் அத்தொழில் முறை ஐரோப்பா முழுவதும் பரவலாயிற்று.

5. கிரேக்கர் பெனிஷியரிடமிருந்து பல தொழில்களைக் கற்றுக்கொண்டாற்போலவே, எழுத்துக்களையும் கற்றுக்கொண்டனர்; தாம் கற்றுக் கொண்ட எழுத்துக்களைத் தம் உச்சரிப்புக்கு ஏற்ற முறையில் மாற்றி அமைத்துக்கொண்டனர். அங்ஙனம் கிரேக்கர் மாற்றி அமைத்துக்கொண்ட எழுத்துக்களிலிருந்தே இன்றைய ஆங்கில எழுத்துக்கள் தோன்றின. ஆங்கிலம் உலகம் முழுவதும் பரவியிருக்கின்றது. ஆங்கிலம் அறிந்தவர் எந்த நாட்டிலும் எளிதிற் பிரயாணம் செய்து தம் கருத்துக்களை அம்மொழியில் தெரிவிக்கலாம். உலக வரலாற்றுச் செய்திகள் அனைத்தும் ஆங்கிலத்திலேயே வரையப்பட்டுள்ளன. இச்சிறப்புடைய மொழிக்கு எழுத்துக்களை உதவிய பெருமை பெனிஷியருக்கும் கிரேக்கருக்குமே உரியதாகும்.

6. "பெனிஷியர் காலத்தில் 'பாபிரஸ்' என்னும் ஒருவகைப் புல் 'பிப்லாஸ்' என்னும் பெனிஷியத் துறைமுகத்திலிருந்து மிகுதியாக வெளிநாடுகளுக்குச் சென்றது. அக்காரணம்பற்றிப் 'பிப்லாஸ்' என்னும் சொல்லே 'காகிதம்' (பேப்பர்) அல்லது 'புத்தகம்' என்பதைக் குறிக்க வழங்கப்பட்டது. அச்சொல் மூலத்திலிருந்து ஆதி நூலாகிய கிறிஸ்துவ வேதநூல் 'பைபில்' எனப் பெயர் பெற்றது," என்று அறிஞர் கூறுகின்றனர்.

7. பெனிஷியர் பல நாடுகளிற் குடியேறி வாணிகம் செய்து வந்தனர். அவர்கள் குடியேறிய நாடுகளிலும் அவர்களுடைய எழுத்துக்களும் தொழில் முறைகளும் பரவின. இங்ஙனம் உலகின் பல நாடுகட்கு நாகரிகத்தைப் பரப்பிய பெனிஷியர், ஏறத்தாழக் கி. பி. 350-ல் கிரேக்க ஆட்சிக்கு அடிமைப்பட்டனர்; பின்பு ஏறத்தாழக் கி. பி. 500-ல் பாரசீக ஆட்சிக்கு உட்பட்டனர். அதனால் தங்கள் வாணிகக் கப்பல்களைப் பாரசீகர் செய்த போர்களுக்கு உதவினர்; தங்கள் வாணிகத்தை இழந்தனர்.

8. அதன் பின்னர் அவர்களுடைய துறைமுகங்களைப்பற்றியோ, அவர்தம் வாணிகத்தைப் பற்றியோ உலகம் அறியாது. தம்ஆட்சி பெற்றுப் பெருமகிழ்ச்சியுடன் வாழ்ந்த மக்கள், வேற்று ஆட்சியில் ஊக்கமும் உணர்ச்சியும் அற்று மனமொடிந்து அழிதல் இயல்பன்றோ?

### அருஞ்சொற்பொருள்

மனப்பான்மை-மனப்போக்கு; மனக்கருத்து. தம் ஆட்சி-சுய ஆட்சி.

### கேள்விகள்

1. பெனிஷியர் வாணிக ஊக்கம் மிக்கவர் என்பதற்குச் சான்று யாது?
2. பெனிஷியரிடம் காணப்பட்ட உயர்ந்த மனப்பான்மை யாது?
3. பெனிஷியரிடமிருந்து கிரேக்கர் கற்றுக்கொண்டவை எவை?
4. எகிப்தியர் செய்துவந்த தொழில்கள் எவை?
5. ஆங்கில எழுத்துக்களுக்கு மூலம் என்ன?
6. ஆங்கில மொழியின் சிறப்பு யாது?

7. கிறிஸ்தவ வேத நூலுக்குப் 'பைபில்' எனப் பெயர் வரக் காரணம் யாது ?

8. பெனிஷியர் சிறப்பிழக்கக் காரணம் என்ன ?

## பயிற்சி

1. உலகப் புகழ், கட்டடக்கலை, குடியேறி, நாளடைவில், மனமொடிந்து, ஏற்ற முறை—இவற்றை உங்கள் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.

2. நாகரிகத்தை, மனமொடிந்து, வரலாற்றுச் செய்திகள், இச்சிறப்பு, தகடாக்கி, பொருளீட்டி—இவற்றைப் பிரித்துக் காட்டுக.

3. ஊக்கம்×சோம்பல். குட்டை, இராது, உயர்ந்த, இன்பம், போர்—எதிர்ச் சொல் கூறுக.

4. (a) ஆ-(பசு), கிளி, மரம்—இவ்வாறு ஓர் எழுத்தோ, இரண்டு முதலிய எழுத்துக்களோ சேர்ந்து ஒரு பொருளைத் தெரிவிப்பது சொல் எனப்படும்.

(1) ஆ (பசு), கிளி, மரம்—என ஒன்றன் பெயரைக் குறிப்பது பெயர்ச்சொல்.

(2) வந்தான், வந்து, வந்த—என ஒன்றன் வினையைக் குறிப்பது வினைச்சொல்.

இவ்வாறு சொல் பெயர்ச்சொல், வினைச்சொல் முதலாகப் பலவகைப்படும்.

(b) போ—என்று நாம் ஏவினால் ஒருவன் போகிறான்.
வா—என்று நாம் ஏவினால் ஒருவன் வருகிறான்.

எனவே 'போகிறான்' என்னும் சொல்லில் உள்ள போ என்னும் முதற் சொல் பகுதி எனப்படும். இதனுடன் வேறு சில உறுப்புக்களும் சேர்ந்தே போகிறான், போனான், போவான் என்று சொற்கள் ஆக்கப்படுகின்றன.

| பகுதி | வினைச்சொற்கள் |
|---|---|
| *வா* | வந்தான், வருகிறான், வருவான். |
| *நில்* | நின்றாள், நிற்கிறாள், நிற்பாள். |
| *படி* | படித்தார், படிக்கிறார், படிப்பார். |
| *ஓடு* | ஓடினது, ஓடுகிறது, ஓடும். |
| *நட* | நடந்தன, நடக்கின்றன, நடக்கும். |

# 9. தென்னைமரத் தொழில்கள்

1. கிராமக் கைத்தொழில்கள் பலவற்றுள் தென்னை மரத்தால் உண்டாகும் தொழில்கள் சில வாகும். அத்தொழில்களை நடத்த விரும்புவோர் தென்னந் தோப்புக்களை உடையவராக இருத்தல் சிறப்பு; தென்னை வளர்ப்பைப்பற்றிய பல விவரங் களை நன்கு அறிந்திருத்தல் வேண்டும்; தென்னை மரத்தின் பல பகுதிகளைக் கொண்டு செய்யவேண் டும் பொருள்களைத் தயாரித்துத் தொழில் நடத்தும் அறிவைப் பெற்றிருத்தல் வேண்டும். தென்னை மரங்கள் பலனைக் கொடுக்க ஏறத்தாழ எட்டு முதல் பத்தாண்டுகள் ஆகும். ஆதலால் தென்னையை வளர்ப்போர் சிறந்த பொறுமை உடையவராக இருத்தல் மிக்க அவசியமாகும்.

2. தென்னை வளர்ப்போர் நெற்றுக்களைத் தேர்ந்தெடுத்து, உப்பும் பசுஞ்சாணமும் கரைத்த குழம்பை அவற்றின்மேல் நன்கு பூசி இரண்டு நாட்கள் நிழலில் உலர்த்த வேண்டும். நன்கு உலர்ந்த பிறகே அவற்றை நாற்றுப்பாத்தியில் நடுதல்வேண்டும். இவ்வாறு செய்வதால் நாற்றைக் கரையான் பிடியாது. நாற்றுப் பாத்திக்குரிய இடத்தில் மிகுந்த மணல் கலப்புள்ள மண்ணைக் கொட்டியிருத்தல் வேண்டும். அதில் தழை எருவும் தொழு எருவும் மிகுதியாகக் கலந்திருத்தல் அவசி யம். இத்தகைய பாத்தியில் சுமார் பத்தங்குல இடைவெளி விட்டு நாற்றுக்களை நடுதல் நல்லது. நெற்றின் முக்கால் பகுதி மண்ணிற் புதையும்படி நடுதல் நலம்.

3. நட்ட பின்னர் மிக்க வெய்யில் ஆகாது.

ஆதலின் பாத்தியை வைக்கோல் போட்டுச் சில வாரங்களேனும் மூடிவைத்தல் வேண்டும்; பாத்திகளில் சிறிது ஈரம் இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். நாற்றுப்பாத்தியில் முளைக்கும் புல் பூண்டுகளை வளரவிடாது அடிக்கடி அப்புறப்படுத்த வேண்டும்; நெற்றிலிருந்து தோன்றி வளரும் இளம் பிள்ளையை ஆடுமாடுகள் கடிக்காமல் பார்த்துக் கொள்ளுதல் இன்றியமையாதது. நட்ட ஆறு திங்களுக்குள் தென்னம்பிள்ளை இரண்டு அல்லது மூன்று அடி உயரம் வளரும். அந்நிலையில் தென்னம்பிள்ளைகளை எடுத்துச் சென்று வேறு இடங்களில் நடலாம்.

4. தென்னையின் வேர்கள் மிகவும் நுட்பமானவை. ஆதலின் அவை நன்கு நிலத்தில் ஊன்றிப் பரவத்தக்க நிலம் செம்மண்ணும் மணலும் கலந்ததாக இருத்தல் வேண்டும். வேறு மண்ணுள்ள இடமாயினும் அங்கு மணல் மிகுதியாக இருத்தல் வேண்டும். மணற்பாங்கான இடங்களில்தான் தென்னை நன்கு பயிராகி மிக்க பலனைத் தருகின்றது. அத்தகைய நிலத்தில்தான் நாற்றுக்களை நடத்தக்க குழிகளை அமைத்தல் நலம்.

5. நாற்றுக்களை நடும் குழி மூன்றடிச் சதுரமாக இருப்பது சிறந்தது. மரத்தின் பட்டைகள் நன்கு வளர்ந்து காற்றில் அசைந்தாடத் தக்கபடி, குழிக்குக் குழி இருபதடி இடைவெளி இருத்தல் நலம். இக்குழிகள் நாற்று நடுதலுக்கு ஒரு திங்கள் முன்னரே ஆயத்தம் செய்யப்பட்டிருத்தல் நல்லது. தென்னையின் வளர்ச்சிக்கு உப்பு இன்றியமையாதது; ஆதலின் எருக்கலந்த சத்துள்ள மண்ணை உப்புடன் கலந்து குழியில் இட்டுத் தென்னம் பிள்ளை வைக்கவேண்டும்.

6. இவ்வாறு ஒழுங்காகத் தென்னம் பிள்ளைகளைக் குழிகளில் நட்ட பிறகு, அவற்றை வளர்ப்பவர் ஆடுமாடுகள் நுழையாதபடி தோப்பிற்கு வேலி அமைத்தல் வேண்டும்; குழிகளில் ஈரம் இருக்கும்படி அவ்வப்போது ஒழுங்காக நீர் பாய்ச்சி வர வேண்டும்; ஓராண்டுவரை நாடோறும் நீர் ஊற்ற வேண்டும்; பின்னர் அவை பலன் தரும்வரை வாரம் இருமுறை நீர் பாய்ச்சி வருதல் நல்லது. குழிகளில் முளைக்கும் களைப் பயிர்களை அடிக்கடி நீக்கவேண்டும்; 'களை எடாதவன் விளைவு எடான்' என்பது பழமொழி; குழியில் நன்றாய் மக்கின தொழு எருவைப் போட்டு வரவேண்டும். இரண்டு ஆண்டுகட்கு ஒரு முறையேனும் இத்தகைய எரு விடுதல் நல்லது. எரு இடுகையில் பழைய மண்ணை அகற்றிப் புதிய மண்ணையும் எருவையும் உப்பையும் கலந்து இடுவது சிறப்புடையது. தென்னை வளர்ப்பவர் கால்நடைகளை வைத்திருப்பின், அவர்கட்கு எரு மிகுதியாகக் கிடைக்கும்.

7. தென்னை வளர்ப்பவர் தென்னந்தோப்பை நன்றாக உழுது, புல்லை வளரச் செய்யலாம். நிலத்தில் புல் முளைக்கத் தொடங்கியவுடன் களைப் பயிர்கள் மறையும். அவர் தம் கால்நடைகளை அங்கு மேயவிடலாம். ஆடுமாடுகள் தோப்பில் தங்கி மேய்வதால் அவற்றின் நீர், சாணம் என்பவை பட்டுத் தோப்பு வளப்பம் பெறும். இங்ஙனம் தோப்பில் புல் வளரச் செய்வதால் இருவகை நன்மைகள் உண்டாகின்றன. ஆயின், கால்நடைகள் தென்னம் பிள்ளைகட்குச் சேதம் விளைக்காதவாறு பார்த்துக்கொள்வது தோப்பினர் கடமையாகும். இங்ஙனம் பொறுமையோடு தென்னம் பிள்ளைகளைப் பாதுகாப்பின்,

அவை மரங்களாகி ஏழாண்டுகளுக்குப் பிறகு பலனைத் தரத் தொடங்கும்.

8. சில தென்னை மரங்கள் ஏழாம் ஆண்டு முதல் சிறிதளவு பலனைத் தருமாயினும், பத்தாம் ஆண்டுக்குப் பிறகே பொதுப்பட எல்லா மரங்களும் நல்ல பயனைத் தரும். ஒரு மரம் ஓராண்டில் ஏறத்தாழ நூற்றிருபது காய்களைத் தரும். ஓர் ஏக்கர் பரப்புள்ள தென்னந்தோப்பில் நூற்றிருபது முதல் நூற்றைம்பது மரங்கள்வரை பயிராக்கலாம். எனவே, அவை ஆண்டுக்குப் பதினுயிரத்துக்கு மேற்பட்ட காய்களை உதவும் என்பதில் ஐயமில்லை. இவ்விளைவை நோக்கியே, 'பெற்ற பிள்ளை கஞ்சி வார்க்காவிடினும் வைத்த பிள்ளை வார்க்கும்' என்னும் பழமொழி கிராமங்களில் எழுந்ததுபோலும்!

9. இனித் தென்னை மரத்தால் தோன்றும் தொழில்களைக் கவனிப்போம்: தென்னை நாரைக் கொண்டு கயிறு திரிக்கும் தொழில் உண்டாகிறது; தென்னை ஓலைகளைக்கொண்டு கீற்று முடையும் தொழில் ஏற்படுகிறது; தேங்காய் ஓட்டைக் கொண்டு அகப்பை செய்யும் தொழில் தோன்றுகிறது; தேங்காய்ப் பருப்பை உலர வைத்துச் செக்கிலிட்டு அரைத்தால் தேங்காய் நெய் உண்டாகிறது; அதனுல் தேங்காய் நெய் உற்பத்தி செய்யும் தொழில் உண்டாகிறது. தேங்காய் நெய் சோப்புச் செய்யும் தொழிலுக்குப் பெரிதும் உதவுகிறது. தேங்காய் வாணிகமும் தோன்றுகிறது.

10. தென்னந்தோப்பை மேய்ச்சல் நிலமாக்கித் தோப்பினர் கால்நடைகளை வளர்ப்பாராயின், அவற்ருலும் அவர்கள் நல்ல பயனைப் பெறலாம்; கால்நடைகள் தோப்பில் மேய்ந்து நல்ல உணவை

யும் உடல் உரத்தையும் பெற்று மிகுந்த அளவு பாலைத் தரும். அதனால் தோப்பினர் பால் பண்ணை வைத்து நடத்தலாம்; பசுக்கன்றுகளை வாங்கித் தோப்பில் விட்டு வளர்த்து மிகுந்த விலைக்கு விற்றுப் பயன் பெறலாம். அறிவும், தொழிலில் ஆக்கமும் உடையவர் மேலும் எண்ணிப் பார்த்துப் பல துணைத் தொழில்களை மேற்கொள்ளலாம்.

## அருஞ்சொற்பொருள்

உலர்ந்த - காய்ந்த. தழை எரு - இலைத் தொடர்பான எரு; காய்ந்த இலைகள், சருகு முதலியன. தொழு எரு - தொழுவத்திலிருந்து எடுக்கப்படும் மாட்டுச் சாணம் முதலியன. பழமொழி - பல நூற்றுண்டுகளாக நாட்டில் வழங்கி வரும் மொழி. உரம் - வலிமை. வாணிகம் - வியாபாரம்.

## கேள்விகள்

1. தென்னை மரத் தொழில்களை நடத்த விரும்புவோர் எவற்றை அறிந்திருத்தல் வேண்டும்?
2. நெற்றுக்களை நாற்றுப் பாத்தியில் எவ்வாறு நடுதல் வேண்டும்?
3. நாற்று நட்ட பிறகு தோப்பினர் செய்யவேண்டுவன யாவை?
4. இளம் பிள்ளைகள் நடத்தக்க நிலம் எப்படி இருத்தல் வேண்டும்?
5. எவ்வாறு குழிகளில் நாற்று நடுதல் வேண்டும்?
6. தோப்பில் பிள்ளைகளை நட்ட பிறகு தோப்பினர் கவனிக்க வேண்டுவன யாவை?
7. தோப்பில் புல்லை வளரச் செய்வதால் உண்டாகும் நலன்கள் யாவை?
8. 'பெற்ற பிள்ளை கஞ்சி வார்க்காவிடினும் வைத்த பிள்ளை வார்க்கும்.'—இதன் கருத்து யாது?
9. தென்னை மரத்தால் தோன்றும் தொழில்கள் எவை?
10. தோப்பினர் கால்நடைகளை வளர்ப்பதால் என்ன நன்மை உண்டாகும்?

## பயிற்சி

1. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துக் கூறுக:—

(1) நாற்று நட்ட ஆறு —— தென்னம் —— இரண்டு மூன்று அடி —— வளரும்.

(2) வாழை மரத்தின் அடியில் அதன் —— தோன்றி வளரும்.

2. இடைவெளி, ஏறத்தாழ, அவ்வப்போது, ஒழுங்காக, அடிக்கடி, துணைத் தொழில்கள்—இவற்றை உங்கள் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.

3. (1) அ+நிலை, அ+தோப்பு, இ+சோலை, அ+மாடு, இ+தகைய.—இவற்றைச் சேர்த்துக் கூறுக.

(2) வளரச்செய், எருவைப்போட்டு, தொழிலுக்குப் பெரிதும், குழிக்குக்குழி, பசுக்கன்று, தேர்ந்தெடுத்து—இவற்றைப் பிரித்துக் காட்டுக.

4. மூடு, நன்மை, உயரம், பொறுமை, சிறிதளவு—எதிர்ச் சொற்களைக் கூறுக.

5. பயிர்த்தொழில் பற்றிய ஆறு பழமொழிகளைக் கூறுக.

6. (1) வேறு மொழிகள் பேசும் மக்களது கூட்டுறவினால் தமிழில் பிற மொழிச் சொற்கள் கலந்துள்ளன. அவற்றுள் பழைமையானவை சம்ஸ்கிருதச் சொற்கள்:—

ரிஷபம், ரிஷி, மிருகம், விஜயம், லக்ஷ்மி, ஸரஸ்வதி, ஹநுமான், ராஜன் முதலியன வடசொற்கள். ஜ, ஸ, ஷ, க்ஷ, ஹ—இவை சம்ஸ்கிருத எழுத்துக்கள்.

(2) போர்ச்சுகீஸியர் தமிழ் நாட்டில் தங்கி வாணிகம் செய்தபொழுது தமிழிற் கலந்த போர்ச்சுகீஸியர் சொற்கள் சில. அவை: கிராம்பு, சன்னல், சாவி, அலமாரி, பாதிரி முதலியன.

(3) ஜமீன், சிபாரிசு, சிப்பாய், சுமார், பந்தோபஸ்து, மேஜை, ரஸ்தா—முதலியன *பாரசீகச் சொற்கள்* எனப்படும். இவை பல திசைகளிலிருந்தும் தமிழ் மொழியில் வந்து வழங்கும் சொற்கள் ஆதலால் *திசைச் சொற்கள்* எனப்படும்.

# 10. வீரத் தாய்மார்

1. சங்ககாலத் தமிழகத்தில் வாழ்ந்த வீரர் மறவர் எனப்பட்டனர். அவர் குடி மறக்குடி எனப் பட்டது. தமிழ் மறவர் 'போர்' என்பது கேட்ட வுடனே மகிழும் இயல்பினர்; போரில் முன் வைத்த காலைப் பின் வையாதவர்; மானத்தை உயிரினும் மேலாகக் கருதினர்; சூழ்ச்சியால்-கீழ்மையால் பகைவரை வெல்லக் கருதவில்லை; போரில் மார்பிற் காயம் படுதலையே பெரும்பேருகக் கருதினர்; புறத் திற் புண் படின் தம் இல்லத்துப் பெண்டிரும் நகைப்பரே என்ற எண்ணத்தால் நாணி உண்ணு நோன்பு கொண்டு உயிர்விடும் பண்பினர்.

2. இத்தகைய தமிழ் வீரர்களைப் பெற்ற தாய் மார்கள் எப்படி இருந்தார்கள்? புலி வயிற்றில் புலி பிறக்குமா? பூனை வயிற்றில் புலி பிறக்குமா?...வீரர் யார் வயிற்றிற் பிறப்பார்? வீரத்தாய்மார் வயிற்றி லிருந்தே வீரர் தோன்றுவர். மறக்குடி மகளிர் அனைவரும் அஞ்சா நெஞ்சம் படைத்தவர்; பிறவி யிற் பெண்பாலரே தவிர, ஆண்மையில் ஆண் பாலர் என்றே கூறலாம். அவர்கள் தம் பிள்ளை களுக்கு இளமை முதலே தம் குடிப்பெருமையையும் தம் குடியில் தோன்றிய முன்னோர் சிறப்பையும் பல கதைகள் வாயிலாகக் கூறி, அவர்களுக்கு வீர வுணர்ச்சியை ஊட்டி வந்தனர். இங்ஙனம் இளமை முதலே வீரவுணர்ச்சி ஊட்டப்பட்ட மக்களிடம் வீரம் சிறந்து காணப்பட்டதில் வியப்பில்லை அன்றோ?

3. ஒரு வீரத்தாய் ஒரே மைந்தனைப் பெற்று வளர்த்தாள். அவன் உரிய வயதில் வாட்போர், மற்

போர் முதலிய போர்ப் பயிற்சிகளில் தேர்ந்து விளங்கினுன். அவன் பிறந்த நாட்டின்மீது வேற்றரசன் படையெடுத்தான். போர் மூண்டது. அப்போரில் தன் கடமையைச் செய்ய அம்மைந்தன் போர்க்களம் சென்ருன். தாய் அவனுக்கு வாழ்த்துரை கூறி அனுப்பினுள்.




4. மைந்தன் போர்க்களம் சென்றதை அறியாத அவன் நண்பன் ஒருவன், அவன் வீட்டிற்கு வந்தான். அவ்வீடு சிறிய கூரை வீடு. அதில் இருந்த தூண்களில் ஒன்றைப் பற்றிக்கொண்டு நின்று அந்நண்பன் வீரத்தாயை நோக்கி, "உன் மகன் எங்குச் சென்றுளன்?" என்று வினுவினுன். வீரத்தாய் அந்நண்பனே முகமலர்ச்சியுடன் நோக்கி, "அப்பனே, புலி தங்கிச் சென்ற குகை போன்றது உன் நண்பனைப் பெற்ற என் வயிறு. புலி வேட்டையாடும் பொருட்டுக் குகையை விட்டு நீங்கினுற் போல—உன் நண்பன் போரின்

பொருட்டு என்னை விட்டு நீங்கலானுன். அவன் போர்க்களத்தில் இருப்பான்,'' என்று பதில் அளித்தாள். நீங்கள் இப்பதிலைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

5. மற்ருெரு வீரத்தாய் வயது முதிர்ந்தவள். அவளுக்கு ஒரே மகன் இருந்தான். அவன் இருந்த நாட்டின்மீது பகையரசன் படை யெடுத்தான். அதனுல் அவனுக்குப் போர் புரிய வாய்ப்புக் கிடைத்தது. தன் வயது முதிர்ந்த தாயை விட்டுப் போர்க்களம் செல்வதை மகன் விரும்பவில்லை. அதனுல் அவன் காலந் தாழ்த்திஞன். தன் பொருட்டுத் தன் வீரமகன் தன் கடமையிலிருந்து தவறுவதை எண்ணிய வீரத்தாய் அவனை அழைத்தாள்; அவனைப் போர்க்கோலம் கொள்ளச் செய்தாள்.

6. தாய் அவனை நோக்கி, "மகனே, வயது முதிர்ந்த தாயைவிட்டுப் பிரிவது தகுமா என்பதை யோசிக்க இது நேரம் அன்று. பகைவன் நம் உயிர்போன்ற தாய்நாட்டின்மீது படையெடுத்து வந்திருக்கிருன். அவனை விரட்டுவதே இந்நாட்டு ஒவ்வொரு வீரனது கடமையுமாகும். அதனைச் செய்யப் போர்க்களம் செல்வதே மறக்குடியிற் பிறந்த உனது கடமையும் ஆகும். உனது கடமையைச் செய்ய உனது *தாய்நாடு* உன்னை அழைக்கிறது என்பதை உனது தாயாகிய யான் கூறுகின்றேன். என்னை மற; நாட்டை நினை; போர்க்களம் செல்; மார்பினைக் காட்டிப் போர் செய். உனக்கு எனது வாழ்த்து உரியது,'' என்று வீர உணர்ச்சி தோன்றக் கூறினுள்.

7. தாயின் வீரவுரையைக் கேட்ட மைந்தன்

தாயைப் பணிந்து விடைபெற்றுப் போர்க்களம் சென்றான்! தன் மறக்குடியின் பெருமையையும் தன் முன்னோர் வீரத்தையும் எண்ணினான்; தன் உயிரைத் துரும்பாக எண்ணிக் கடும்போர் புரிந்தான். அவனது வாட்போர்த் திறமையைக் கண்டு மன்னன் மகிழ்ந்து பாராட்டினான். ஆயின், பகைவன் விட்ட அம்பொன்று அவன் மார்பிற் பாய்ந்தது. அவன் போர்க்களத்தில் ஆவி துறந்தான்.

8. "நின் மகன் முதுகிற் காயம்பட்டு இறந்தான்," என்று வம்பன் ஒருவன் வீரத்தாயி



வீரத்தாய் மகனுடலைக் காணுதல்

டம் சென்று கூறினான். அச்சொல்லைக் கேட்கப் பொறாத முதியவள் சீறி எழுந்தாள்; வழிவழியாக வீட்டில் வைத்துப் பூசிக்கப்பட்டிருந்த வாளைக் கையில் எடுத்தாள்; "நான் போர்க்களம் செல்வேன்; என் மைந்தனது உடலைக் காண்பேன்; அவன் முதுகிற் புண்பட்டு மடிந்திருப்பின் வீரன்

அல்லன் ; ஆதலின் அவனுக்குப் பால் ஈந்த என் மார்பகத்தை அறுப்பேன்,'' என்று வஞ்சினம் கூறினுள் ; போர்க்களம் நோக்கிக் கடுகி நடந்தாள்.

9. அமர்க்களம் சென்ற அன்னை, அங்கிருந்த வீரர் காட்டத் தன் ஆருயிர் மைந்தனது ஆவியற்ற உடலைக் கண்டாள் ; அவன் தனது மார்பில் அம்பு பட்டே இறந்தான் என்பதை ஐயமற உணர்ந்தாள். ஆ! அப்போது அவள் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை ; "என் மகன் தான் பிறந்த மறக்குடிக்கு ஏற்பவே இறந்தான்,'' என்ருள். அவள் கண்கள் மகிழ்ச்சியால் நீரை உகுத்தன.

பிள்ளைகளே நீங்கள் பிறந்த தமிழ் நாட்டில் இத்தகைய வீரத்தாய்மார் பலர் இருந்தனர் என்பதை நினைவிற் கொள்க.

## அருஞ்சொற்பொருள்

மறம் - வீரம். மறவர் - வீரர். மறக்குடி - வீரர்குடி, வீரக்குடி. பேறு - பாக்கியம். நாணி - வெட்கப்பட்டு. புறம்-முதுகு. பண்பு - இயல்பு. வாயிலாக - மூலமாக. வாய்ப்பு - சந்தர்ப்பம். ஆண்மை - ஆளுந்தன்மை. பெண்மை - அமைதித் தன்மை. உரிய - தக்க. வேற்றரசன் - வேறு அரசன். மைந்தன் - மகன். தாழ்த்தினுன் - தாமதித்தான். வம்பன் - குறும்புக்காரன். பொருத - பொறுக்காத. வழிவழியாக - பரம்பரையாக. மடிந்து - இறந்து. வஞ்சினம் - சபதம். அமர் - போர். ஈந்த - கொடுத்த. ஐயம் அற - சந்தேகம் நீங்க. ஏற்ப - பொருந்த. உகுத்தன - சிந்தின. அளித்தாள் - கொடுத்தாள்.

## கேள்விகள்

1. சங்ககால மறவர் எத்தகையவர்?
2. மறக்குடி மகளிர் இயல்புகள் யாவை?
3. 'உன் மகன் எங்குச் சென்றுளன்?' என்ற வினுவிற்குத் தாய் தந்த விடை யாது?
4. வீரத்தாய் தன் மகனுக்குக் கூறிய வீரவுரை யாது?
5. வீரன் எவ்வாறு போர் புரிந்தான்?

6. வீரத்தாய் போர்க்களம் சென்றதற்குக் காரணம் என்ன ?

7. அவள் போர்க்களத்தில் என்ன செய்தாள் ?

8. நீங்கள் இந்த வீரத்தாய்மார் இருவரைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள் ?

பயிற்சி

1. கீழ்வருவனவற்றிற் சரியான பொருள் உள்ள வாக்கியங்களைக் குறிப்பிடுக :—

(1) வீரர் மானத்தை உயிரினும் மேலாகக் கருதிலர்.
வீரர் மானத்தை உயிரினும் மேலாகக் கருதினர்.

(2) வீரன் தன் உயிரைத் துரும்பாக எண்ணிக் கடும் போர் புரிந்திலன்.
வீரன் தன் உயிரைத் துரும்பாக எண்ணிக் கடும்போர் புரிந்தான்.

2. ஏற்ற எழுவாய் — பயனிலை — செயப்படுபொருள்களைச் சேர்த்துக் கூறுக :—

| | | |
|---|---|---|
| (1) வீரன் | வாளை | உரியது |
| (2) வீரத்தாய் | எனது வாழ்த்து | துரும்பாகஎண்ணினான் |
| (3) உனக்கு | உயிரை | கையில் எடுத்தாள் |

3. தண்ணீர் என்னும் சொல்லைச் சாதாரண மக்கள் 'தண்ணி' என்கின்றனர்; 'நேற்று' என்பதை 'நேத்து' என்கின்றனர். இவ்வாறு கூறுதல் வழு (குற்றம்). ஆதலால் தண்ணி, நேத்து என்பன வழுஉச்சொற்கள் எனப்படும். படிக்கின்ற பிள்ளைகள் வழூஉச்சொற்களைப் பேசுதலும் எழுதுதலும் தவறு.

| வழூஉச்சொல் | திருத்தம் |
|---|---|
| அமக்களம் | அமர்க்களம் |
| ஆத்துக்கு | ஆற்றுக்கு |
| ஆத்துக்கு | அகத்துக்கு (வீட்டுக்கு) |
| இருக்குது | இருக்கிறது |
| ஒலக்கை | உலக்கை |
| கண்ணாலம் | கலியாணம் |
| சுவற்றில் | சுவரில் |
| நஞ்சை | நன்செய் |
| புஞ்சை | புன்செய் |

# 11. செய்தித் தாள்கள்

1. கல்வி, அரசியல், சுகாதாரம், கைத்தொழில், வாணிகம் முதலிய பலதுறைகளைப் பற்றிய உலகச் செய்திகளை வெளியிடும் தாள்கள் **செய்தித் தாள்கள்** எனப் பெயர் பெறும். அவற்றுள் நாடோறும் வெளிவருவன ***நாள் செய்தித் தாள்கள்*** எனப்படும்; வாரத்திற்கு ஒரு முறை வருவன ***வாரச் செய்தித் தாள்கள்*** எனப்படும்; திங்களுக்கு ஒருமுறை வெளிவருவன ***திங்கள்***



***செய்தித் தாள்கள்*** என்று பெயர் பெறும். பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை வருவனவும் உண்டு.

2. இங்ஙனம் பல காலங்களிலும் வெளிப்படும் செய்தித்தாள்கள் மேல்நாடுகளிற் பொன்னே போலப் போற்றப்படுகின்றன. அங்குச் செல்வர் முதல் வறிஞர் ஈறுக அனைவருமே நாள்தோறும்

செய்தித்தாள்களைப் படித்து, உலகச் செய்திகளை அறிகின்றனர். அவர்கள் தாங்கள் ஒரு நாளிற் செய்யவேண்டும் பலதிறப்பட்ட வேலைகளிற் செய்தித் தாள்களைப் படித்தலையும் ஒரு வேலையெனக் கொண்டிருக்கின்றனர்.

3. ‘அமெரிக்க உழவர் இன்னின்ன எருக்களை இட்டு இன்ன முறையிற் பயிர்செய்து கோதுமையைப் பயிராக்குகின்றனர்,’ என்று செய்தித்தாளில் வெளிவரும் செய்தி, ஒவ்வொரு நாட்டு உழவர்க்கும் தேவையானது அன்றோ? ‘ஜெர்மனியில் இன்ன நோயைத் தடுக்கப் புதிய மருந்து கண்டுபிடிக்கப் பட்டது,’ என வெளிப்படும் செய்தி, உலக மக்கட்கு முக்கியமானது அன்றோ? ‘இங்கிலாந்தில் உள்ள போலீசார் பொதுமக்கட்கு இன்னின்ன துறைகளில் உதவிபுரிகின்றனர்,’ என வெளிவரும் செய்தி, ஒவ்வொரு நாட்டுப் போலீஸ் இலாகாவிற்கும் பொதுமக்கட்கும் தேவையான செய்தி அன்றோ? ‘டென்மார்க்கு நாடு கூட்டுறவு முறையைக் கைப்பற்றிக் கிராமக் கைத்தொழில்களை இவ்வாறு வளர்க்கிறது,’ என விளக்கமாக வரும் செய்தி, ஒவ்வொரு நாட்டுக் கைத்தொழில் வளர்ச்சிக்கும் அவசியமானது அன்றோ? ‘ரஷிய மாணவர் இன்னின்ன உடற்பயிற்சிகளைச் செய்கிறார்கள்’ என்னும் செய்தி பட விளக்கத்துடன் செய்தித் தாள்களில் வருதல், நம் மாணவர் விரும்பிப் படிக்கத்தகும் செய்தி அன்றோ?

4. இவ்வாறு நாடோறும் வெளியாகும் செய்திகள் பல. நாடோறும் பவுன், வெள்ளி இவற்றின் விலை, பருத்தி, மணிலாக்கொட்டை முதலிய பொருள்களின் விலைப்பட்டி முதலிய வணிகர்க்குத்

தேவையான விவரங்களும் செய்தித் தாள்களில் வருகின்றன. வானொலி நிகழ்ச்சிகள், படக்காட்சி விவரங்கள், அரிய சொற்பொழிவுகள், அரிய நூல் களைப்பற்றிய மதிப்புரைகள், நாட்டு நடவடிக்கை கள், குறிப்பிடதக்க வழக்கு விவரங்கள் என்பன போன்ற பலதிறச் செய்திகளும் செய்தித்தாள் களில் வெளியாகின்றன. இவற்ருல் உழவர், வாணி கர், மாணவர் முதலிய அனைவர்க்கும் செய்தித் தாள்கள் செய்திகளை உதவுகின்றன என்பது நன்கு விளங்கும்.

5. ஒரு நாடு எல்லாத் துறைகளிலும் முன் னேறச் செய்தித்தாள்கள் இன்றியமையாதவை என்பதை எல்லா நாடுகளும் நன்கு உணர்ந்துள் ளன. படித்த மக்களின் தொகை மிகக் குறைவாக வுள்ள நமது நாட்டிலும் இப்பொழுது செய்தித் தாள்கள் வளர்பிறைபோல வளர்ந்துவருகின்றன. நமது தமிழகத்தில் சுதேசமித்திரன், தினமணி, தினசரி முதலிய நாட் செய்தித்தாள்களும், ஆனந்த விகடன், கல்கி முதலிய வாரச் செய்தித் தாள்களும், செந்தமிழ், குருகுலம், கலைமகள் முதலிய திங்கள் தாள்களும் இருந்துவருகின்றன. இவற்ருல் ஆயிரக்கணக்கான மக்கள் உலக அறி வைப் பெற்றுவருகின்றனர்.

6. நீங்கள் மேற்சொல்லப்பட்ட பலவகைச் செய்தித்தாள்களையும் படித்து, அவற்றிற் சிறந்து காணப்படும் செய்திகளைச் சுருக்கி உங்கள் செய் தித்தாள் நோட்டுப் புத்தகத்தில் எழுதிவைத்துக் கொள்க; இன்றேல், அச்செய்திகளைக் கத்திரித்து ஒட்டிவைத்துக்கொள்க. அவை உங்கள் சொற் பொழிவுகட்கும் கட்டுரைகட்கும் பேருதவிசெய்யும்.

7. புனிதம் என்னும் ஆறும் வகுப்பு மாணவியினது செய்தித்தாள் நோட்டுப் புத்தகத்தில் பல அரிய செய்திகளைக் கத்தரித்து ஒட்டியிருக்கின்ருள். அவற்றுள் சில இங்குத் தரப்படும். நீங்கள் அவற்றைப்போன்ற செய்திகளைத் தொகுத்து வைத்துப் பயன்பெறுக.

## *1. நியூயார்க்கு நகரின் புதிய பஸ் சந்திப்பு*

நியூயார்க்கு நகருக்குத் தினந்தோறும் வந்து செல்லும் உள்ளூர், வெளியூர் பஸ்கள் 2300 ஆகும். அவை வந்து தங்கிச் செல்லப் புதிய வசதிகளுடன் கூடிய மிகப் பெரிய பஸ் சந்திப்பு ஒன்று நியூயார்க்கில் கட்டப்பட்டுள்ளது. இச்சந்திப்பு 800 அடி நீளமும் 200 அடி அகலமும் உள்ளது. தரைக்கு அடியிலும் தரைமட்டத்திலும் அதற்கு மேல் இரண்டு மாடிகளுமாக நான்கு பகுதிகள் இருக்கின்றன. தரைமட்டத்திற்குக் கீழ் இருக்கும் பகுதி, தரைக்கடியில் செல்லும் இரண்டு ரயில் பாதைகளுக்கு எளிதிற் செல்ல வசதி அளிக்கிறது. தரைமட்டத்தில் உள்ள பகுதியிலும் முதல் மாடியிலும் பிரயாணிகள் வசதிக்காகப் பலவகைக் கடைகள் இருக்கின்றன. பிரயாணிகள் தாங்கள் தங்கியிருக்கும் இடத்திலிருந்தே சுவர்களில் உள்ள டெலிபோனைக் கையிலெடுத்துப் பஸ்கள் புறப்படும் நேரத்தையோ, தங்கள் பிரயாணத்தைப்பற்றிய வேறு விவரங்களையோ, சந்திப்பு நிலையத்தில் உள்ள அலுவலகத்திற் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். சாமான்களைப் பூட்டிவைப்பதற்குரிய அறைகள், பிரயாணச் சீட்டு விற்கும் அறைகள், டெலிபோன் அறை முதலியன சந்திப்பு நிலையத்தில்

அமைக்கப்பட்டுள்ளன. மேலும் அங்கு நீராடும் அறைகளும் ஆடை அலங்கார அறைகளும் இருக்கின்றன.

—குருகுலம் (மாத இதழ்), 15-3-'51.

## 2. மாணவரைத் தேடிச் செல்லும் பல்கலைக் கழகம்

பெரிய பல்கலைக் கழகங்கள் இல்லாத ஊர்களில் வாழும் பிள்ளைகட்குப் பல்கலை அறிவை உண்டாக்க, நியூயார்க்குப் பல்கலைக் கழகம், அப்பிள்ளைகளைத் தேடிச் சென்று, அவர்கள் வட்டாரத்திலேயே கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளது. இதன் ஆதரவில் 35 இடங்களில் மாணவர்கள் உயர்கல்வி கற்கின்றனர்.

வாரத்திற்கு ஒரு முறை நியூயார்க்கு நகரத்திலிருந்து பேராசிரியர் ஐம்பதின்மர் இவ்விடங்கட்குச் சென்று பாடங்களைக் கற்பித்துவருகின்றனர்.

—குருகுலம் (மாத இதழ்). 15-3-'51.

### அருஞ்சொற்பொருள்

ஈறுக - முடிவாக. இன்றேல் - இல்லாவிடில். சொற்பொழிவு - பிரசங்கம். குருகுலம் - இது வாலாஜாபாத் இந்து மத பாடசாலையார் வெளிப்படுத்தும் திங்கள் இதழ். இது நான்கு ஆண்டுகளாக நடைபெற்றுவருகின்றது. பல்கலைக் கழகம் - பி. ஏ., எம். ஏ. முதலிய உயர் வகுப்புக்களை நடத்தி வரும் கல்லூரிகளையும், பலவகைக் கலைகளைக் கற்பிக்கும் கல்லூரிகளையும் கண்காணிக்கும் அல்லது வைத்து நடத்தும் கழகம்.

### கேள்விகள்

1. எவை 'செய்தித் தாள்கள்' எனப் பெயர் பெறும்?
2. பலவகைச் செய்தித்தாள்கள் யாவை?
3. மேனாட்டார் செய்தித் தாள்களை எவ்வாறு போற்றுகின்றனர்?
4. செய்தித் தாள்கள் எல்லோருக்கும் தேவை என்பது எப்படிப் பொருந்தும்?

5. நம் தமிழ்நாட்டுச் செய்தித் தாள்கள் யாவை ?
6. புனிதம் அரிய செய்திகளை எவ்வாறு சேர்த்து வைத்திருக்கிருள் ?
7. அச்செய்திகளில் இரண்டு யாவை ?
8. அவற்ருல் நீவிர் பெறும் நன்மை யாது ?

## பயிற்சி

1. சந்திப்பு, உயர் கல்வி, பல்கலைக் கழகம், ஐம்பதின்மர், எளிதில், வளர்ச்சி, சொற்பொழிவு.—இவற்றைத் தனித் தனி வாக்கியத்தில் அமைத்துச் சொல்லுக.

2. 'கூட்டுறவு இயக்கம்' பற்றிய விவரங்களைப் புத்தகங்களிலிருந்தோ, பிறர் மூலமாகவோ அறிந்து ஒரு கட்டுரை வரைக.

3. உலகம்+செய்திகள், வாரம்+செய்திகள், கிராமம்+கைத்தொழில்கள், செந்தமிழ்+செல்வி, எல்லாம்+துறைகள்—சேர்த்துக் கூறுக.

4. நாடோறும்=நாள்+தோறும். தரைக்கடியில், பல வகைக்கடைகள், வைப்பதற்குரிய, நாட்டுக் கைத்தொழில், நோட்டுப்புத்தகம், செய்தித்தாள், ஆயிரக்கணக்கான.—பிரித்துக் காட்டுக.

5. (1) ஒன்று, இரண்டு, பத்து—என வருபவை எண்ணுப் பெயர்கள் (2) முதலாம் மாணவன், இரண்டாம் மாணவன்—என எண்ணுப்பெயர்கள் வேறு பெயர்களோடு சேரும் பொழுது மாறிவரும். (3) முதலாவது மாடு, இரண்டாவது மாடு—என வருதலும் உண்டு.

6. வந்தான், வந்து, வந்த—என்பவை வினைச் சொற்கள் என்பது முன்பே கூறப்பட்டது அன்ருே ?—(1) இவற்றில் பொருள் முற்றி (முடிந்து) நிற்கும் வினைச்சொல் எது ? வந்தான்—என்பது வினைமுற்றி நிற்பது ஆதலால் வினைமுற்று எனப்படும். வந்து, வந்த—என்பவை முற்றுப்பெருத வினைச் சொற்கள். (2) வந்து என்பது, வந்து (போனுன்) என்ருற்போல வேருெரு வினைச்சொல்லைக்கொண்டு முடிகிறது. ஆதலால் இது வினையெச்சம் (எச்சம் - குறைவு) எனப்படும். (3) வந்த என்பது, வந்த (பையன், மாடு) என்ருற்போல ஒரு பெயரைக் கொண்டு முடிகிறது. ஆதலால் இது பெயரெச்சம் எனப்படும்.

இப்பாடத்தில் வந்துள்ள (1) வினைமுற்று, (2) வினையெச்சம், (3) பெயரெச்சங்களைக் கூறுக.

## 12. நல்லார் இணக்கம்

### (கபிலரும் பாரியும்)

1. உயர்ந்த கல்வி, கேள்வி, ஒழுக்கம் இவற்றிற் சிறந்தவர் இருவர்க்குள் உண்டாகும் நட்பு 'நல்லார் இணக்கம்' எனப்படும். 'நல்லவர் நட்பு வளர்பிறைபோல நாளும் வளரும் இயல்புடையது; அல்லவர் நட்புத் தேய்பிறைபோல நாளும் தேய்ந்து அழியும் தன்மையுடையது,' என்று புலவர்கள் கூறியுள்ளார்கள். இஃது உண்மை என்பதை நாம் நடைமுறையிற் காணலாம். உண்மை நண்பர் இருவர்க்குள் ஒருவர் தம் பண்டை நிலையில் தாழ்வராயினும், மற்றவர் அவரை விட்டு நீங்கார்; நண்பர் இறக்கத் தாம் இறப்பர், அல்லது நண்பர் இறந்தபின் அவர் குடும்பத்தினரை நன்னிலையில் வைக்க அரும்பாடுபடுவர். இதுவே உண்மை நட்பின் உயரிய இலக்கணம். இத்தகைய உண்மை நட்புடைப் பெருமக்கள் பலர் பண்டைத் தமிழகத்தில் வாழ்ந்திருந்தனர். அவருள் **கபிலர்** என்பவர் ஒருவர்.

2. **கபிலர்** சங்ககாலப் புலவர்; பிராமணர். அவர் கல்வி, கேள்வி, ஒழுக்கங்களிற் சிறந்தவர்; ஆதலால் ஔவையார், பரணர் போன்ற புலவர்களால் பல பாக்களில் சிறப்பிக்கப்பட்டவர். அவர் காலத்தில் பாண்டிய நாட்டில் **வேள்-பாரி** என்று ஒரு சிற்றரசன் இருந்தான். அவன் பறம்பு மலை நாட்டுக்குத் தலைவன்; வறியவர்க்கு வள்ளலாய் விளங்கியவன்; பொறுமை, அடக்கம் முதலிய நற்குணங்களை இயல்பாகப் பெற்றவன்.

3. அவனுடைய நல்ல இயல்புகளைக் கேள்வி

யுற்ற கபிலர் பறம்பு மலை நாட்டை அடைந்தார்; பாரி வள்ளலை நேரிற் கண்டார். அவரைப்பற்றி முன்னரே கேள்வியுற்றிருந்த பாரி, அவரை உள்ளன்புடன் வரவேற்று உபசரித்தான். நாட்கள் சில சென்றன. புலவர் வள்ளலின் உள்ளன்பை உள்ள வாறு உணர்ந்தார்; அவனை விட்டுப் பிரிய மனம் இல்லாமல் பறம்பு மலையிலேயே தங்கிவிட்டார். பாரி அவரிடம் தன் மகளிர் இருவரையும் தமிழ் கற்க விட்டான். புலவர், பாரியின் வீட்டாருள் ஒருவராக விளங்கினர்.

4. பாரி வள்ளல் தன் ஆட்சிக்கு உட்பட்ட முன்னூறு ஊர்களையும் பரிசிலர்க்கு வழங்கினன். அதைக் கண்டு வியப்படைந்த கபிலர், அவனைத் தம் பாக்களாற் சிறப்பித்தார். அவன் தனக்கென வாழாப் பெருமகன் என்பதை அறிந்து, தமிழ் நாட்டு மக்கள் அவனை மனமாரப் போற்றினர். இப்போற்றுதல் காரணமோ, வேறு அரசியல் காரணமோ, உண்மை யாதென்பது தெரியவில்லை; பறம்பு மலையைச் சேர, சோழ, பாண்டியர் மூவரும் முற்றுகை இட்டனர். அப்பொழுது கபிலர் மூவேந்தர்க்குப் பலவாறு அறிவுரை கூறினர்; பாரியின் நற்குணங்களை நன்கு விளக்கினர். மூவேந்தர் கபிலரின் அறிவுரையை ஏற்கவில்லை. இறுதியில் பாரி பகைவராற் கொல்லப்பட்டான். பறம்பு மலை பகைவர் கைப்பட்டது.

5. கபிலர் பாரி மகளிரை அழைத்துக்கொண்டு பறம்பு நாட்டை விட்டு வெளியேறினர். அவர்கள் இருவர்க்கும் நல்லதோர் அரசகுடியில் மணம் முடித்துவைக்க வேண்டும் என்பது அவர் ஆவல். அதனல் அவர் அவர்களை அழைத்துக்கொண்டு

**விச்சிக்கோ** என்ற சிற்றரசனிடம் சென்றார்; அவனை அன்புடன் நோக்கி, "அரசே, அம்மகளிர் கொடை நலமும் குணநலமும் சிறந்து விளங்கிய பாரி வள்ளலின் மகளிர். நான் புலவன்; பிராமணன். பாரி இறந்தமையால் இம்மகளிர்க்கு மணஞ் செய்துவைக்க வேண்டும் பொறுப்பு என்னைச் சேர்ந்தது. நான் இவர்களை உனக்கு மணம் செய்துதருவேன்; நீ இவர்களை மணந்து வாழ்வாயாக," என்று கூறினர். மூவேந்தர்க்கும் பகைவனான பாரியின் மகளிரை மணப்பின், அவர்தம் பகைமை தனக்கு உண்டாகும் என்று அஞ்சியோ, வேறு எக்காரணத்தாலோ, விச்சிக்கோ பாரிமகளிரை மணக்க உடன்படவில்லை.

6. கபிலர் மேலும் வழிநடந்து, **இருங்கோவேள்** என்ற சிற்றரசனிடம் சென்றார்; "மன்ன, இவர்கள் பாரி வள்ளலின் மகளிர். நான் அவ்வள்ளலின் தோழன். ஆதலின் இவர்கள் எனக்கு மகளிர் ஆவர். அன்றியும் நான் புலவன். நான் தர, நீ இவர்களை மணந்து வாழ்வாயாக," என்றார். அச்சிற்றரசனும் மூவேந்தர்க்கு அஞ்சியோ, வேறு எதனாலோ, பாரி மகளிரை மணக்க விரும்பவில்லை.

7. அவன் விரும்பாததைக் கண்ட கபிலர் கோபம் கொண்டார். அவர் அவனை நோக்கி, "நீ அரசனும் அல்லை; வீரனும் அல்லை. வேங்கை மலர் சிதறிக் கிடக்கும் மலைப்பாறை, தூரத்தில் உள்ளவர்க்குப் புலிபோலத் தோன்றிப் பயமுறுத்தும். அதுபோல நீ அரச வுடைகளைக் கொண்டு அரசனைப்போலக் காணப்படுகிறாய். ஆயின், அரசாளும் திறமையும் அதற்கு ஏற்ற வீரமும் உன்னிடம் இல்லை. இத்தகைய உன்னிடம் வந்து, 'இவர் பாரி

மகளிர். இவர்களை மணந்துகொள்' என்று உன் நிலைமை அறியாமல் உன்னைப்பார்த்து யான் கூறியது தவறு. நான் கூறியது பாரியின் பெருமைக்குப் பழுதாகும். அதனால் நான் சொன்னதை மறந்துவிடுக. நீ வாழ்வாயாக,'' என்று இகழ்ந்து கூறிச் சென்றார்.

8. பின்னர்க் கபிலர் பாரி மகளிரை எங்கு அழைத்துச் சென்றார் என்பது தெரியவில்லை. 'அவர் திருக்கோவலூரில் பிராமணர் வீட்டில் அம் மகளிரை அடைக்கலமாக விட்டுச் சென்றார். அதனை அறிந்த ஔவையார் முன்னின்று அப் பெண்மணிகளைத் திருக்கோவலூர் அரசனான மலையமான் மக்களுக்கு மணம் முடித்தனர்,' என்று கதைகள் வழங்குகின்றன. உண்மை உணரக்கூட வில்லை.

9. கபிலர், பாரி இறந்த பிறகு நீண்டநாள் உயிர்வாழ விரும்பவில்லை. அவர் திருக்கோவலூரிற் பெண்ணையாற்றங்கரையில் வடக்கிருந்து உயிர் நீத்தார் என்பது தெரிகிறது. அவர் அவ்வமயம் பாரியை முன்னிலைப்படுத்திச் சொன்ன வாக்கியங் கள் இவையாகும்:

"முழவு வாத்தியத்தைப் போன்ற உருவ அமைப்புடைய பலாப்பழங்கள் காய்க்கும் வளம் மிக்க மலையை உடையவனே, வரையாது வழங்கிய வள்ளலே, நான் உன்னுடன் இணைபிரியாது வாழ்ந்தேன்; வாழ்ந்தும் என்ன பயன்! நீ இறக் கும்போது நானும் இறக்கத் துணிந்தேன். நீ 'வேண்டா' என்று என்னைத் தடுத்தாய். நான் உன்னுடன் வருவதை நீ விரும்பவில்லைபோலும்! நான் உன்னுடன் இறப்பதற்குத் தகுதியுடையவன்

அல்லன் என்று கருதினையோ? நான் தக்கவன் அல்லன் ஆயினும், இப்பிறப்பில் நீயும் நானும் கூடி வாழ்ந்தாற்போலவே, மறு பிறப்பிலும் உன்னை விட்டுப் பிரியாமல் வாழ்தலை விதி கூட்டுவதாகுக!"

நல்லார் இணக்கத்திற்கு இதைவிட நற்சான்று வேறு வேண்டுமா?

## அருஞ்சொற்பொருள்

அல்லவர் - நல்லவர் அல்லாதவர். நடைமுறை - செயல் முறை. தமிழகம் - வேங்கடமலைக்கும் குமரி முனைக்கும் இடைப்பட்ட தென் இந்தியப் பகுதி. பறம்புநாடு - இராமநாதபுர மாவட்டத்தில் உள்ள பிரான்மலையைச் சேர்ந்த நிலப் பகுதி. பழுது - குற்றம். வடக்கிருத்தல் - உயிர்விட விரும்பும் நன்மக்கள் ஆற்றிடைக்குறையில் ஒரு மரநிழலில் வடக்கிருந்து உண்ணா நோன்பினை மேற்கொள்ளுதல். முழவு - ஒருவகை வாத்தியம். வரையாது - அளவு பாராது. சான்று - சாட்சி.

## கேள்விகள்

1. 'நல்லார் இணக்கம்' என்பது யாது? அதன் இலக்கணம் என்ன?
2. வேள் பாரியின் சிறப்பியல்புகள் யாவை?
3. பாரிக்கும் கபிலர்க்கும் எங்ஙனம் நட்பு ஏற்பட்டது?
4. மூவேந்தர் முற்றுகையின்போது கபிலர் செய்த தொண்டு யாது?
5. பாரி இறந்தபின் கபிலர் அவன் மகளிர்க்குச் செய்த உதவி யாது?
6. அவர் விச்சிக்கோவிடம் யாது கூறினர்?
7. அவர் இருங்கோவேளிடம் முதலிற் கூறியது யாது?
8. அவர் இருங்கோவேளிடம் சினந்து கூறியது யாது?
9. பாரி மகளிர் மணத்தைப்பற்றி வழங்கும் கதைகள் எவை?
10. கபிலர் தாம் இறக்கும் சமயத்தில் யாது கூறினர்?

## பயிற்சி

1. நடைமுறை, இயல்பாக, மனமார, தனக்கென, பொறுப்பு, வரையாது, இணக்கம்—இவற்றை உங்கள் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.

2. வறியவர், உட்பட்ட, பகைமை, தோழன், சிதறி—எதிர்ச்சொல் கூறுக.

3. கபிலரும் பாரியும்—பாரிக்குப் பின் கபிலர் வாழ்க்கை—கபிலர் இறுதி மொழிகள்: இக்குறிப்புக்களைக் கொண்டு இப்பாடப் பொருளை ஒரு கட்டுரையாக வரைக.

4. இப்பாடத்தின் முதற் பாராவில் உள்ள எ. ப. செ. கூறுக.

5. மூன்றும் பாராவில் உள்ள வினைமுற்று, வினையெச்சம், பெயரெச்சங்களைச் சொல்லுக.

6. நான்காம் பாராவில் உள்ள வினைமுற்றுக்களையும் அவற்றின் காலங்களையும் கூறுக.

7. ஒன்பதாம் பாடத்தின் கடைசியில் திசைச்சொற்கள் சிலவற்றைப் படித்தீர்கள். இங்கு மேலும் சிலவற்றைப் படிக்கலாம்:—

(1) அனுமத்து, ஆசாமி, இலாகா, மாமூல், முன்சீப், வசூல் முதலியன—அரேபியநாட்டுச் சொற்கள்.

(2) அசல், அந்தஸ்து, அலுவா, அம்பாரி, ஆஜர், உஷார், ஜமுக்காளம், தபால், பஞ்சாயத், பங்களா, ருஜு, லட்டு முதலியன—இந்துஸ்தானிச் சொற்கள்.

8. (1) இப்புற்றில் நாகம் இருக்கிறது.—பாம்பு.

(2) நாகம் குருவிக்கூட்டைக் கலைத்தது.—குரங்கு.

(3) இந்நாகம் மலர்ந்திருக்கிறது.—புன்னை மரம்.

(4) தடநாகம் உயரமானது.—மலை.

(5) நாற்படைகளுள் நாகப்படை ஒன்று.—யானை.

இவ்வாறு நாகம் என்னும் ஒரே சொல் இடங்களுக்கேற்ப, பாம்பு, குரங்கு, புன்னை மரம், மலை, யானை எனப் பல பொருள்களில் வரும். இவ்வாறு வரும் சொற்களை நினைவில் வையுங்கள்.

# செய்யுட் பகுதி

## I. கடவுள் வாழ்த்து

கங்குலிலே வருந்தியஎன் வருத்தமெலாம் தவிர்த்தே
காலையிலே என்னுளத்தே கிடைத்தபெருங் களிப்பே
செங்குவளை மாலையொடு மல்லிகைப்பூ மாலை
சேர்ந்தணிந்தென் றனைமணந்த தெய்வமண வாளா!
எங்குமொளி மயமாகி நின்றநிலை காட்டி [ளே!
என்னகத்தும் புறத்துநிறைந் திலங்கிய மெய்ப்பொரு
துங்கமுறத் திருப்பொதுவில் திருநடஞ்செய் அரசே!
சொன்மாலை சூட்டுகின்றேன் தோளிலணிந் தருளே.

—இராமலிங்க அடிகள்

இதனைப் பாடியவர் இராமலிங்க அடிகள்; ஏறத்தாழ நூறுண்டுகட்கு முற்பட்டவர்; சமரச சன்மார்க்க சங்கத்தைத் தோற்றுவித்த பெரியார். இவர் பாடிய ஆருயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களைக்கொண்ட நூல் திரு அருட்பா எனப்படும். இவர் உரைநடை எழுதுவதிலும் வல்லவர்.

### அருஞ்சொற்பொருள்

கங்குல் - இரவு. அடிகள் தம்மை மணப்பெண்ணுகவும் கடவுளை மணமகனுகவும் கருதிப் பாடுகிருர். இலங்கிய - விளங்கிய. துங்கம் - பரிசுத்தம். உற - பொருந்த. பொது - பொதுவிடம், அம்பலம். நடம் - நடனம்.

### கேள்விகள்

1. அடிகள் இறைவனைப்பற்றி யாது கூறுகிருர்?
2. அடிகள் இறைவனை எவ்வெவ்வாறு அழைக்கிருர்?

## பயிற்சி

1. செங்குவளை, மல்லிகை—இவைபோன்ற ஆறு மலர்களின் பெயர்களைக் கூறுக.

2. மலர் மாலை, சொல்மாலை—இவற்றைப்பற்றி ஐந்தைந்து வாக்கியங்கள் சொல்லுக.

3. பார்த்தல் என்னும் ஒரே பொருளை மேலோட்டமாகத் தரும் பல சொற்கள் கீழே தரப்படுகின்றன. அவை பொருளில் நுட்பமாக வேறுபடுதலைக் காண்க :—

(1) அவன் பெட்டியைப் பார்த்தான்.—சாதாரணமாகப் பார்த்தல்.

(2) அநுமன் சீதையைக் கண்டான். — தேடிக் காணுதல்.

(3) அவன் என்னை நோக்கி வந்தான்.—குறியாகக் கொள்ளுதல்.

(4) அவன் என்னைக் கவனித்தான்.—ஊன்றிப்பார்த்தல்.

இவ்வாறு வரும் சொற்களையும் அவற்றின் பொருள்கள் நுட்பமாக வேறுபடுதலையும் குறித்து வையுங்கள்.

4. கடல்+அலை=கடலலை. இவ்வாறு சொற்கள் ஒன்றுடன் ஒன்று சேருவது *புணர்ச்சி* எனப்படும். முதற்சொல் *நிலைமொழி* எனப்படும்; இரண்டாம் சொல் *வருமொழி* எனப்படும்.

(1) மரம்+வளரும்=மரம் வளரும் என இரண்டு சொற்களும் ஒருவித மாறுதலும் இல்லாமல் இயல்பாகப் புணருவது *இயல்பு புணர்ச்சி* எனப்படும்.

(2) புளி + பழம் = புளி + *அம்*+ பழம் = புளியம்பழம். இதில் அம் தோன்றியது.

(3) பல்+பொடி=பற்பொடி. இதில் *ல்*—*ற்* ஆகத் திரிந்து இரு சொற்களும் புணர்ந்தன.

(4) மரம்+வேர்=மரவேர். இதில் ம் கெட்டது.

இவை மூன்றும் முறையே (1) *தோன்றல் விகாரம்* (2) *திரிதல் விகாரம்*, (3) *கெடுதல் விகாரம்* எனப்படும். இவை மூன்றும் *விகாரப் புணர்ச்சி* எனப்படும்.



## II. இயற்கை அழகு

### 1. அந்திப் பொழுது

காவென்று கத்திடும் காக்கை—என்றன்
கண்ணுக் கினிய கருநிறக் காக்கை ;
மேவிப் பலகிளை மீதில்—இங்கு
விண்ணிடை அந்திப் பொழுதினைக் கண்டே
கூவித் திரியும் சிலவே ; சில
கூட்டங்கள் கூடித் திசைதொறும் போகும் ;
தேவி பராசக்தி அன்னை—விண்ணில்
செவ்வொளி காட்டிப் பிறைதலைக் கொண்டாள். (1)

தென்னை மரக்கிளை மீதில்—அங்கோர்
செல்வப் பசுங்கிளி கீச்சிட்டுப் பாயும் ;
சின்னஞ் சிறிய குருவி—அது
'ஜிவ்' வென்று விண்ணிடை ஊசலிட்டேகும் ;

மன்னப் பருந்தோர் இரண்டு—மெல்ல
வட்டமிட்டுப்பின் னெடுந்தொலை போகும் ;
பின்னர்த் தெருவிலோர் சேவல்—அதன்
பேச்சினிலே 'சக்தி வேலென்'று கூவும். (2)

—சுப்பிரமணிய பாரதியார்

## 2. மங்கிய வானில் குன்றின் காட்சி

மறைகின்றான் பரிதி ; குன்ற
மங்கையோ ஒளியி ழந்து
நிறைமூங்கில் இளங்கை நீட்டி
'வாராயோ' எனஅ ழைப்பாள் ;
சிறுபுட்கள் அலறும் ; யானை
இருப்பிடம் சேரும் ; அங்கோர்
குறுநரி ஊளைச் சங்கால்
'இருள்இருள்' என்று கூவும்.

—பாரதிதாசன்

சுப்பிரமணிய பாரதியார் நாடறிந்த தேசபக்தர், சிறந்த கவிஞர், சில ஆண்டுகட்கு முன் காலமானவர். இவருடைய பாக்களை அறியாத தமிழர் இல்லை.

பாரதிதாசன் அவர்கள் சுப்பிரமணிய பாரதியாரின் மாணவர், அதனால் 'பாரதிதாசன்' எனப் பெயர் பெற்றார். இப்பொழுது நம்மிடையே வாழ்கின்ற கவிஞர், புதுச்சேரியில் இருப்பவர். இவருடைய செய்யுள் நூல்கள் பலவாகும். அவை சீர்திருத்தக் கருத்துக்களை மிகுதியாகக்கொண்டு இனிய நடையில் விளங்குபவை.

### அருஞ்சொற்பொருள்

1. மேவி - பொருந்தி. விண் - ஆகாயம். தேவி பராசக்தி - இயற்கைத் தாய் ; பிறை, இயற்கை அன்னையின் தலை மீதுள்ளது என்று நயம்படக் கூறுதல் காண்க.

2. மன் அ - அரசனாகிய அந்த.

## கேள்விகள்

1. அந்திப்பொழுதில் எவ்வெப்பறவை என்னென்ன செய்வதாகக் கவிஞர் கூறினர் ?
2. வானத்திற் பிறை தோன்றியிருத்தலைக் கவி எப்படிச் சிறப்பிக்கிருர் ?
3. மங்கியவானில் குன்றின் காட்சியைக் கவிஞர் எவ்வாறு கூறுகிருர் ?

## பயிற்சி

1. அந்திப்பொழுதின் சிறப்பினை 10 வரியில் எழுதுக.
2. மங்கியவானில் குன்றின் காட்சியை விளக்கி வரைக.
3. கண்ணுக்கினிய, திசைதொறும், செவ்வொளி. நெடுந்தொலை, வட்டமிட்டு, பரிதி—இவற்றை உங்கள் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.
4. நீங்கள் அந்திப் பொழுதைக் கவனியுங்கள் ; அதைப் பற்றி 10 வரிகளில் எழுதுக.
5. (1) அ + அணில் = அவ்வணில்
இ + ஆடு = இவ்வாடு
உ + இலை = உவ்விலை
எ + ஓடு = எவ்வோடு

இவ்வாறு அ, இ, உ என்னும் சுட்டு எழுத்துக்களின் முன்னும் 'எ' என்னும் வினு எழுத்தின் முன்னும் உயிர் எழுத்து வந்தால் 'வ்' தோன்றி இரட்டிக்கும்.

(2) அ + கதவு = அக்கதவு
இ + பசு = இப்பசு
இ + தடை = இத்தடை
அ + ஙனம் = அங்ஙனம்
எ + ஙனம் = எங்ஙனம்

இவ்வாறு சுட்டெழுத்துக்களுக்கு முன்னும் எகர வினுவின் முன்னும் மொழி முதலில் வரும் எழுத்து மிகும்.

# III. அறவுரை

## 1. நன்னெறி

### கற்ருேர் இயல்பு

கைம்மா றுகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மால் இயலுதவி தாஞ்செய்வர் ;—அம்மா !
முளைக்கும் எயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியினதா மென்று. (1)

### கற்றவரே மேன்மை அடைவர்

கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
மற்றையர்தாம் என்றும் மதியாரே—வெற்றிநெடு
வேல்வேண்டும் வாள்விழியாய் ! வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம். (2)

### விழுமியோர் இயல்பு

தக்கார்க்கே யீவர் தகார்க்களிப்பா ரில்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர்—எக்காலும்
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய். (3)

### நல்லவர் நட்பும் தீயவர் நட்பும்

நல்லார் செயுங்கேண்மை நாடோறும் நன்ருகும்
அல்லார் செயுங்கேண்மையாகாதே—நல்லாய்கேள்
காய்முற்றிற் றின்றீங் கனியா மிளந்தளிர்நாள்
போய்முற்றி னென்னுகிப் போம். (4)

### வேந்தரினும் அறிஞரே மேலானவர்

பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னு மறிஞரைத்தா மற்றெவ்வார்—மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே யதுபுனையாக்
காணுங்க ணெக்குமோ காண். (5)

—சிவப்பிரகாச சுவாமிகள்

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் வீரசைவர்; ஏறத்தாழ 150 ஆண்டுகட்கு முற்பட்டவர்; சொல்லழகும் பொருட் சிறப்பும் பெற்ற கணக்கற்ற பாடல்களைப் பாடிய பெரியவர்.

## அருஞ்சொற்பொருள்

1. கைம்மாறு - பதில் உதவி. உகவாமல் - விரும்பாமல். அம்மா - முன்னிலை அசைச்சொல். எயிறு - பல். வலியினது - வலிமையுடையது.

2. காமுறுவர் - விரும்புவர். மற்றையர் - கல்லாதவர். வெற்றி......விழியாய் - வெற்றி பொருந்திய வேல்போன்ற கூர்மையான விழிகளை உடையவளே! மகடூஉ முன்னிலை. புளிங்காடி - புளித்த கள். வேண்டும் - விரும்பும்.

3. தக்கார் - உதவி பெறத் தக்கவர். மிக்கார் - செல்வம் மிக்கவர். விழுமியோர் - நற்குணங்களால் சிறந்தவர்.

4. கேண்மை - நட்பு. அல்லார் - நல்லவர் அல்லாதவர், தீயவர். ஆகாது - நல்லது ஆகாது. நல்லாய் - நற்குணங்களை உடையவளே! மகடூஉ முன்னிலை. தின் - தின்னத்தக்க. தீம்கனி - இனிய பழம். காய் முற்றியபின் இனிய பழமாகும்; இளந்தளிர் முற்றினால் எவருக்கும் பயன்படாது.

5. பொன் - பொன் நகைகள். புனையா - பொன் நகைகளை அணியா. மன்னும் - பொருந்திய. மற்று - அசை. பூண் - நகை. காணும் - பார்க்கும்.

## கேள்விகள்

1. கற்றறிந்தோர் இயல்பு யாது?
2. மேன்மக்கள் யாரை விரும்புவர்? யாரை விரும்பார்? ஏன்?
3. "நெல்லுக்கு இறைப்பதே நீர்"—இது எதனை விளக்க வந்தது?
4. காய், இளம்தளிர்—இவை எவற்றை விளக்கவந்தன?
5. வேந்தர் கற்றவரை ஒவ்வார்—எதுபோல? ஏன்?

## பயிற்சி

1. கற்றவர் சிறப்பை விளக்கும் மூன்று பாடல்களின் கருத்தை உங்கள் சொந்த நடையில் எழுதுக.

2. உவமானம், உவமேயம் இவற்றை ஒரு செய்யுளைக் கொண்டு விளக்கிக் காட்டுக.

3. கற்றறிந்தோர், பொன்னணியும், இயலுதவி, தகார்க் களிப்பார்-இவற்றைச்சொந்தவாக்கியங்களில்பயன்படுத்துக.

4. நெல்லுக்கிறைப்பதே, நீரன்றி—இவற்றைப் பிரித்துக் காட்டுக.

5. முதற் செய்யுளில் உள்ள எ. ப. செ. கூறுக.

6. கல்வியின் சிறப்பைப்பற்றிப் பத்து வரிகள் எழுதுக.

7. கண்ணனை+கண்டேன்=கண்ணனைக்கண்டேன்
கண்ணனை+சந்தி =கண்ணனைச்சந்தி
கண்ணனை+தழுவு =கண்ணனைத்தழுவு
கண்ணனை+பார் =கண்ணனைப்பார்

இவ்வாறு இரண்டாம் வேற்றுமை உருபு (ஐ)க்கு முன் வரும் க, ச, த, ப மிகும்.

8. கண்ணனுக்கு+கொடு =கண்ணனுக்குக்கொடு
கண்ணனுக்கு+செலுத்து=கண்ணனுக்குச்செலுத்து
கண்ணனுக்கு+தா =கண்ணனுக்குத்தா
கண்ணனுக்கு+பங்கு =கண்ணனுக்குப்பங்கு

இவ்வாறு நான்காம் வேற்றுமை உருபு (கு-வ்வு)க்கு முன் வரும் க, ச, த, ப மிகும்.

## 2. நீதிநெறி விளக்கம்

### கல்வி நலம்

கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோர் அணிகலம் வேண்டாவாம்—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக்(கு) அழகுசெய் வார். (1)

### அறிவும் சொல்வன்மையும்

எத்துணைய ஆயினும் கல்வி இடமறிந்(து)
உய்த்துணர்(வு) இல்லெனின் இல்லாகும்—
[உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை இன்றெனின் என்னும் அஃதுண்டேல்
பொன்மலர் நாற்றம் உடைத்து. (2)

### கருவம் கூடாது

முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க—சிற்றுளியால்
கல்லுந் தகரும்; தகரா கனங்குழாய்!
கொல்லுலைக் கூடத்தி னால். (3)

### கெடுவது காட்டுங்குறி

நட்புப் பிரித்தல் பகைநட்டல் ஒற்றிகழ்தல்
பக்கத்தார் யாவரையும் ஐயுறுதல்—தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி. (4)

### புலி பசித்தும் புல்லைத் தின்னாது

நல்லா(று) ஒழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற்(கு) ஒருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியே(று) அறப்பசித்துந் தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ். (5)

—குமரகுருபர சுவாமிகள்

### அருஞ்சொற்பொருள்

குமரகுருபர அடிகள் முன்னூறு ஆண்டுகட்குமுன் வாழ்ந்தவர், சிறந்த சிவபக்தர், டில்லி பாதுஷாவால் மதிக்கப் பட்டவர், பல நூல்களைப் பாடியுள்ளவர்.

1. நலன் - அழகு. கலன் - நகை. அணிகலம் - நகை. பூண் - நகை.

2. உய்த்து உணர்வு - ஆராய்ந்து உணரும் தன்மை. சொல்வன்மை - பேச்சுத்திறமை. நாற்றம்-வாசனை.

3. கற்றனம் - கற்றுவிட்டோம். களியற்க - களிப்படைய வேண்டா. சிற்றுளி-சிறுமை+உளி. தகரும் - உடைபடும். கனங்குழாய் . கனத்த காதணியை உடையவளே! மகடூஉ முன்னிலை. கொல் - கொல்லன்.

4. நட்டல்-சிநேகித்தல். ஒற்று-ஒற்றர். நெடுமொழி-அறிவுரை. கோறல் - கேளாதிருத்தல். குணம் - நற்குணம். பிறிதாதல் - வேறுபடுதல்.

5. நல்லாறு - நல்+ஆறு - நல்ல வழி. நல்கூர்ந்தும் - வறுமைப்பட்டும். ஒருப்படார்-சம்மதியார். பொறிய-புள்ளிகளையுடைய. செங்கண்-செம்மை+கண். புலியேறு-ஆண் புலி. அற-முழுவதும். கூழ்-பயிர். பைங்கண்-பசுமை+கண்.

## கேள்விகள்

1. கற்ருேர்க்கு அணி எது?
2. "அஃதுண்டேல்பொன்மலர் நாற்றம் உடைத்து"—"அஃது" என்பது எதனைக்குறிக்கிறது?
3. சிற்றுளியின் சிறப்பு யாது? அது உணர்த்தும் படிப்பினை என்ன?
4. கெடுவது காட்டுங்குறி எவை?
5. "அல்லன செய்தற்கு ஒருப்படார்"—யார்? எதுபோல ஒருப்படார்?

## பயிற்சி

1. மணிப்பூண், உய்த்துணர்ந்து, இன்றெனின், அஃதுண்டேல், வெற்றுடம்பு, சிற்றுளி, பிறிதாதல், நல்லாறு, பைங்கூழ்—இவற்றைப் பிரித்துக் காட்டுக.

2. முதற் செய்யுளில் உள்ள எ. ப. செ. கூறுக.

3. மூன்ரும் செய்யுளில் உள்ள பெயர்ச் சொற்களையும், வினைச் சொற்களையும் கூறுக.

4. நான்காம் பாடலில் உள்ள தொழிற் பெயர்களைச் சொல்லுக.

5. இகழ்தல், நெடுமொழி, நல்கூர்ந்தும், சிற்றுளி, சொல்வன்மை—இவற்றை உங்கள் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.

6. (1) அந்த + கழுதை =அந்தக்கழுதை
அங்கு + போனுன் =அங்குப்போனுன்
எப்படி + செய்தான்=எப்படிச்செய்தான்

இவ்வாறு, அந்த, இந்த, எந்த
அங்கு, இங்கு, எங்கு
அப்படி, இப்படி, எப்படி } இவற்றின் முன்வரும் க, ச, த, ப மிகும்.

(2) நல்லவனுய்+போனுன்=நல்லவனுய்ப்போனுன்
வல்லவனுக+செய் =வல்லவனுகச்செய்
வல்லவனுகி+தேர் =வல்லவனுகித்தேர்
போய் +பார் =போய்ப்பார்
அதுபற்றி +பேசு =அதுபற்றிப்பேசு
பலவித +பைகள் =பலவிதப்பைகள்
பலவகை +பூக்கள் =பலவகைப்பூக்கள்

இவ்வாறு சொல்லின் கடைசியில் வரும் ஆய், ஆக, ஆகி இவற்றின் முன்னும், போய், பற்றி, வித, வகை இவற்றின் முன்னும் வரும் க, ச, த, ப மிகும்.

## 3. இன்ன நாற்பது

கொடுங்கோல் மறமன்னர் கீழ்வாழ்தல் இன்னு ;
நெடுநீர் புணையின்றி நீந்துதல் இன்னு ;
கடுமொழி யாளர் தொடர்(பு) இன்னு ; இன்னு
தடுமாறி வாழ்தல் உயிர்க்கு. (1)

ஆற்றல் இலாதான் பிடித்த படைஇன்னு
நாற்றம் இலாத மலரின் அழகின்னு ;
தோற்றம் இலாதான் துணிவின்னு ; ஆங்கின்னு
மாற்றம் அறியான் உரை. (2)

பொருளுணர்வார் இல்வழிப்பாட்டுரைத்தல் இன்னு;
இருள்கூர் சிறுநெறித் தாந்தனிப் போக்கின்னு ;
அருளில்லார் தங்கட் செலவின்னு ; இன்னு ;
பொருளில்லார் வண்மை புரிவு. (3)

நட்டார் இடுக்கண்கள் காண்டல் நனிஇன்னு ;
ஒட்டார் பெருமிதங் காண்டல் பெரிதின்னு ;
கட்டில்லா மூதூர் உறைவின்னு ; ஆங்கின்னு
நட்ட கவற்றினுற் சூது. (4)

பெருமை யுடையாரைப் பீடழித்தல் இன்னு;
கிழமை யுடையார்க் களைந்திடுதல் இன்னு;
வளமையி லாளர் வனப்பின்னு; இன்னு
இளமையுள் மூப்புப் புகல். (5)

—கபிலர்

அருஞ்சொற்பொருள்

கபிலர் இற்றைக்கு 1,800 ஆண்டுகட்கு முற்பட்டவர் என்று சிலர் கூறுவர். சிலர் இக்கபிலர் 5 அல்லது 6-ஆம் நூற்றுண்டினர் என்றும் கூறுவர்.

இன்னு - துன்பம் தருபவை.

1. கொடுங்கோல்×செங்கோல். மறம்-கொடுமை. நெடு நீர் - ஆழமுள்ள நீர் நிலே. புணை - தெப்பம். தொடர்பு - நட்பு. தடுமாறி - மனத்தடுமாற்றம் அடைந்து.

2. ஆற்றல் - வலிமை. படை - ஆயுதம். நாற்றம் - வாசனை. மாற்றம்-விடை.

3. இல்வழி-இல்லாத இடம். கூர்-பொருந்திய. செலவு-போதல். வண்மைபுரிவு-தருமம் செய்தல்.

4. நட்டார் - நள்+ட்+ஆர் - சிநேகிதர். இடுக்கண் - துன்பம். காண்டல்-காணுதல். நனி - மிகவும். ஒட்டார்-பகைவர். பெருமிதம் - கர்வம். கட்டு-காவல். மூதூர்-முதுமை+ஊர், பழையஊர். உறைவு-வசித்தல். நட்ட—நட்பாகக்கொள்ளப்பட்ட. கவற்றிஞல் - கவற்றைக் கொண்டு ஆடுகின்ற. கவறு-தாயக்கட்டை. சூது-சூதாட்டம்.

5. பீடு அழித்தல்-பெருமை அழியச்செய்தல். கிழமை-உரிமை. வளமை-செல்வம். மூப்பு-முதுமைக்கு உரிய தன்மைகள். புகல் - உண்டாதல்.

பயிற்சி

1. இவ்வைந்து செய்யுட்களின் பொருளை 15 வரிகளில் எழுதுக.

2. மறமன்னர், புணையின்றி, கடுமொழி, அழகின்னு, பொருளுணர்வார், பாட்டுரைத்தல், கட்டில்லா—இவற்றைப் பிரித்துக் காட்டுக.

3. வனப்பு, கிழமை, நட்டார், சிறுநெறி, செலவு, நாற்றம், மாற்றம், புணை—இவற்றை உன்சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.

4. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துக் கூறுக :—(1) கடுமொழியாளர் —— இன்னா. (2) தோற்றம் —— துணிவு ——, (3) ஒட்டார் —— காண்டல் ——. (4) இளமையுள் —— —— இன்னா.

5. (1) இச்செய்யுட் பகுதியில் வந்துள்ள பெயரெச்சங்களையும் வினையெச்சங்களையும் எடுத்துக் கூறுக.

(2) இரண்டாம் செய்யுளிலுள்ள எ. ப. செ. கூறுக.

(3) இன்னா இளமையுள் மூப்புப் புகல்—எழுவாய் முதலில் அமையும்படி வாக்கியத்தை மாற்றி எழுதுக.

6. கந்தன் வந்தான். கந்தன் கடைக்குப் போனான். கந்தன் புத்தகம் வாங்கினான்.—ஒரே எழுவாய் அமையும்படி இம்மூன்று வாக்கியங்களையும் சேர்த்து எழுதுவது எப்படி ?

கந்தன் வந்தான் ; கடைக்குப்போனான் ; புத்தகம் வாங்கினான்.—என்று மாற்றி எழுதவேண்டும். கண்ணன் மாடு மேய்த்தான். கண்ணன் குழல் ஊதினான். கண்ணன் பாட்டுப் பாடினான்.—இவற்றை ஒரே வாக்கியமாக எழுதுக.

7. (1) மணி+அடி = மணி + (ய்) + அடி
= மணியடி

(2) தீ + அவி = தீ+(ய்)+அவி
= தீயவி

(3) பனை+ஓலை = பனை+(ய்)+ஓலை

நிலைமொழி ஈற்றில் உள்ள இ, ஈ, ஐ—இவற்றின் முன் உயிர் எழுத்து வரின், இடையில் 'ய்' தோன்றும்.

8. (1) கோ+இல் = கோ+(வ்)+இல்
= கோவில்

(2) சே+அடி = (i) சே+(வ்)+அடி
= சேவடி
(ii) சே+(ய்)+அடி
= சேயடி

(1) இ,ஈ,ஐ,ஏ ஒழிந்த எட்டு உயிர்களின் முன்னும் உயிர் வரின், இடையில் 'வ்' தோன்றும்.

(2) ஏ முன் உயிர் வரினும் இடையில் 'வ்' தோன்றும் ; சில இடங்களில் 'ய்' யும் தோன்றும்.

# IV. கதை

## பஞ்ச தந்திரம்

[கௌட தேசத்துத் தேவசன்மா என்னும் அந்தணன் தனது மனைவி யாகசேனை கருப்பமாக இருப்பதை அறிந்தான்; அவள் மகிழும்படி, "உனது வயிற்றிலே ஒரு மகன் பிறப்பான்; அவன் நூறு வயது உயிரோடிருப்பான்; பல கலைகளையும் கற்றவனாவான்; அரசன் மெச்ச வாழ்வான்; நம்மையும் இனிது காப்பான்," என்று கூறுகின்றான். அப்பால் யாகசேனை,]

காணுமுன் கேட்கு முன்னே
காரியங் களைநி னைந்து
வீணிலே பூமி யின்மேல்
விழுந்துருண் டழுது நெஞ்சம்
நாணினன் பிரம சாரி
நாடிலங் கதுபோல் நீயும்
பூணணி மார்ப! வீணே
புகலவொண் ணுதென் ருளே. (1)

உரைத்தவக் கதையே தென்ன,
வோதுமோர் நகரந் தன்னில்
தரித்திரப் பிரம சாரி
சார்ந்தொரு சிராத்தத் துண்டான்;
அரைத்திடும் பொரிமாத் தோண்டி
யவற்கொரு மறையோ னீந்தான்;
திருத்தியிற் பருப்புஞ் சோறும்
தின்றதோர் மயக்கத் தாலே, (2)

மற்ஞெரு நகர்க்குச் செல்லும்
வழியிலோர் மணற்ற டத்தில்
சற்ஞெரு கணப்போ தங்கே
தரித்தவன் இருந்து நெஞ்சில்
உற்றகா ரியங்கள் கோடி
வுன்னினன் இந்த மாவை
விற்றுநா மாடு வாங்கி
மேய்க்கிலோர் இரண்டு குட்டி (3)

போடுமவ் விரண்டில் ஒன்ரும்
பொருகடாத் தன்ஊ விற்று
நாடுபெண் ஆடி ரண்டு
நயவிஊ யாகக் கொள்வோம் ;
ஆடொரு நாலாம் அந்த
ஆடுகள் இரண்டு இரண்டாப்
போடுமக் குட்டி யோடே,
பொருந்திய பனிரண் டாமே ; (4)

பன்னிரண் டாடும் விற்றுப்
பசுக்களோர் இரண்டு கொள்வோம் ;
தன்னிலே பட்டி மேய்ந்து
தருக்கியே இரண்டு ஈனும் ;
மன்னுபால் நெய்யும் விற்று
மற்றிரு பசுவுங் கொள்வோம் ;
அன்னவப் பசுக்கள் ஆறும்
ஆறுசேங் கன்று நல்கும். (5)

மூவணை யேருங் கூட்டி
　　முன்னுள நிலங்கள் எல்லாம்
ஓவற வளங்க ளாக
　　வுழுதுநாம் பயிர்கள் இட்டே
மேவுதா னியங்கள் எல்லாம்
　　விலைகளைக் குறைய விற்றுக்
காவலன் அறிக்கை யாலே
　　கனக்கவோர் வீடுங் கட்டி (6)

இருந்துநாம் பணமுங் காசும்
　　ஏரொடு பொருளுந் தேடிப்
பொருந்திய பிராம ணர்க்குப்
　　போஜனம் இடுவோம் ; இட்டால்
வருந்தியே நமக்குப் பெண்ணும்
　　வலியவே தருவார் ; அந்தத்
திருந்திழை யாள்வ யிற்றிற்
　　சனிப்பனோர் சிறந்த மைந்தன். (7)

அப்படி யிருக்கு நாளில்,
　　அந்தியிற் பசுக்கள் கட்டக்
கொப்படர் கண்ணுள் செல்லக்
　　குழந்தையும் அழூம்நா மோடி
இப்படி யடிப்போ மங்கே
　　என்றொரு தடியெ டுத்துச்
செப்பிய பொரிமாத் தோண்டி
　　சிதறிட வடித்திட் டானே. (8)

கலங்கினன் பிரம சாரி
காரகஸ் தங்க ளெல்லாம்
துலங்கிய பொரிமா வைத்த
தோண்டியோ டழிந்த தன்றே;
மலங்குகண் ணீர்கள் சோர
வயிற்றினில் அடித்துக் கொண்டே
நிலந்தனிற் புரண்டு வீழ்ந்து
நெடுந்துயர் அடைந்தான் அன்றே.(9)

—வீரமார்த்தாண்டதேவர்

## அருஞ்சொற்பொருள்

பஞ்சதந்திரக் கதைகளைத் தமிழில் பாடிய வீரமார்த்தாண்டதேவர் காலம் உறுதியாகக் கூறமுடியவில்லை. செய்யுட்கள் எளிய தமிழ் நடையில் உள்ளன.

1. நாணினன்-வெட்கப்பட்டான். நாடில் - ஆராய்ந்து பார்த்தால். அணி-அணிந்த. புகலவொண்ணுது-சொல்லத் தகாது.

2. ஓதும் - சொல்வாள். பிரமசாரி-மணம் ஆகாதவன். சிராத்தம் - இறந்தவர்க்குச் செய்யும் கடன். மறையோன் - வேதங்களில் வல்லவன், பிராமணன். திருத்தியில் - திருப்தியாக.

3. தடம்-இடம். உன்னினன்-நினைத்தான்.

4. பொருகடா-சண்டையிடும் ஆண் ஆடு.

5. ஈனும்-குட்டிபோடும்.

6. காவலன்–அரசன்.

7. திருந்திழை-திருந்து+இழை-திருத்தமான நகை.

8. கொப்பு-காதணி. கொப்பு அடர்கண்ணுள்-காதளவு ஓடிய கண்களை உடையவள், பிரமசாரியின் மனைவி. செப்பிய-முன்சொன்ன.

9. துலங்கிய-விளங்கிய. நெடுந்துயர்-மிக்க வருத்தம்.

## கேள்விகள்

1. "வீணே புகலவொண்ணுது"—எதனை? ஏன்?
2. பிரமசாரிக்குப் பொரிமாத் தோண்டி எவ்வாறு கிடைத்தது?
3. பிரமசாரி கட்டிய மனக் கோட்டை யாது?
4. அக்கோட்டை எவ்வாறு பாழானது?
5. நீங்கள் இக்கதையால் அறியும் நீதி யாது?

## பயிற்சி

1. பிரமசாரியின் கதையை 15 வரிகளில் எழுதுக.

2. தருக்கி, விற்று, நயவிலை, வலிய, சிதறிட—இவற்றை உங்கள் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.

3. நெடுந்துயர், திருந்திழை, பெண்ணுடு, இரண்டிரண்டு, மணற்றடம்.—இவற்றைப் பிரித்துக் காட்டுக.

4. விழுந்து+உருண்டு உருண்டு+அழுது, அங்கு+அது, அ+கதை, ஏது+என்ன, பொரிமா+தோண்டி—இவற்றைச் சேர்த்து எழுதுக.

5. எட்டாம் செய்யுளில் வந்துள்ள (1) வினைமுற்று, (2) வினையெச்சம், (3) பெயரெச்சம் இவற்றைக் கூறுக.

6. மங்களம் காலையில் எழுந்தாள்.
மங்களம் கருத்துடன் படித்தாள்.
மங்களம் பள்ளிக்குச் சென்ருள்.

இம்மூன்று வாக்கியங்களையும் ஒரே வாக்கியமாக்க என்ன செய்யவேண்டும்? முதல் வாக்கியத்தில் உள்ள 'எழுந்தாள்' என்னும் பயனிலையையும் இரண்டாம் வாக்கியத்திலுள்ள 'படித்தாள்' என்னும் பயனிலையையும் முறையே எழுந்து, படித்து என்று வினையெச்சங்களாக மாற்றவேண்டும்; இத்துடன் இரண்டு மூன்ரும் வாக்கியங்களில் வந்துள்ள மங்களம் என்னும் எழுவாயை நீக்கிவிடவேண்டும். அங்ஙனம் செய்யின், மங்களம் காலையில் *எழுந்து*, கருத்துடன் *படித்து*, பள்ளிக்குச் சென்ருள்—என்று ஒரு வாக்கியமாக அமையும். இதை நினைவிற்கொண்டு, கீழ்வரும் வாக்கியங்களை ஒரே வாக்கியமாக்குக:—

கார்டெஸ் மெக்ஸிகோவை அடைந்தார். அவர் இந்தியரை நண்பராக்கினுர். அவர் அஸ்டெக்ஸ் இனத்தவரை வென்ருர்.

7. (1) கல்+அடி = கல்+(ல்)+அடி
= கல்லடி

(2) நல்+அரசு = நல்+(ல்)+அரசு
= நல்லரசு

நிலைமொழி தனிக்குறிலும் மெய்யுமாக இருந்து வருமொழி முதலில் உயிர்வரின், நிலைமொழியீற்றிலுள்ள மெய் இரட்டும்.

வல்+அரசு=வல்லரசு. கண்+அழகு=கண்ணழகு.
எள்+அளவு=எள்ளளவு.

8. (1) பால்+ஏடு=பாலேடு (ல்+ஏ=லே)
கால்+அழகு=காலழகு (ல்+அ=ல)

இங்கு நிலைமொழி தனிநெடிலும் மெய்யுமாக உள்ளது. ஆதலால் கடைசி மெய் வருமொழி முதலில் உள்ள உயிருடன் கூடுகிறது.

(2) அவன்+இல்லை=அவனில்லை (ன்+இ=னி)
நூல்+எங்கே=நூலெங்கே? (ல்+எ=லெ)

இவ்வாறு தனிக்குறில் அல்லாத பிற எழுத்துக்களுக்குப் பின்வரும் மெய், வருமொழி முதலில் உள்ள உயிருடன் கூடும்.

## V. பலசுவை

### ஏட்டின் சிறப்பு

மட்டாரும் தென்களந்தைப் படிக்காசன்
உரைத்ததமிழ் வரைந்த ஏட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும்
பரிமளிக்கும்; பரிந்தவ் வேட்டைத்
தொட்டாலும் கைம்மணக்கும்; சொன்னாலும்
வாய்மணக்கும்; துய்ய சேற்றில்
நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே
பாட்டினுறு நளினந் தானே. (1)

—படிக்காசுப்புலவர்

### வஞ்சப் புகழ்ச்சி

வில்லா லடிக்கச் செருப்பால்
உதைக்க வெகுண்டொருவன்
கல்லா லெறியப் பிரம்பால்
அடிக்கஇக் காசினியில்
அல்லார் பொழில்தில்லை அம்பல
வாணர்க்கோ ரன்னைபிதா
இல்லாத தாலல்ல வோஇங்ங
னேயெளி தானதுவே! (2)

—காளமேகப்புலவர்

## வெண்ணெயூர்ச் சிறப்பு

மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று
வீட்டளவும்பால்சொரியும்வெண்ணெயே-நாட்டில்
அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும்
உடையான் சரராமன் ஊர். (3)

—கம்பர்

## கருமி—கொடையாளி

திருத்தங்கி தன்வாழை தேம்பழுத்து நிற்கும்
மருத்தன் திருக்குடந்தை வாழை—குருத்து
இலையுமிலைப் பூவுமிலைக் காயுமில என்றும்
உலகில் வருவிருந்தோ டுண்டு. (4)

—ஔவையார்

1. படிக்காசுப்புலவர் 17, 18-ஆம் நூற்றுண்டுகளில் வாழ்ந்தவர், தொண்டை மண்டல சதகம் பாடியவர், பல தனிப் பாடல்களையும் செய்தவர்.

2. காளமேகப்புலவர் 15-ஆம் நூற்றுண்டினர், காள மேகம் நீர் பொழிதல்போலத் தங்கு தடையின்றிப் பாடல் களைப் பாடியவர்.

3. கம்பர் 12-ஆம் நூற்றுண்டுப்பெரும்புலவர், இராமா யணம் பாடி அழியாப் புகழ் பெற்றவர்.

4. ஔவையார் சங்ககால ஔவையாரினும் வேருன வர், கம்பர் காலத்தவர் என்று இவரை அறிஞர் கூறுவர்.

### அருஞ்சொற்பொருள்

1. மட்டு - வாசனை. ஆரும் - பொருந்திய. தென் களந்தை - செங்கற்பட்டு ஜில்லாவில் உள்ள ஒரூர். சூழ்ந் தாலும் - சுற்றினுலும். துய்ய - பரிசுத்தமான. உறு - பொருந் திய. நளினம் - பொருட் சிறப்பு.

2. சிவனை வில்லால் அடித்தவன் அருச்சுனன் : செருப்பால் உதைத்தவன் கண்ணப்பன் ; கல்லால் எறிந்தவன் சாக்கியன் ; பிரம்பால் அடித்தவன் பாண்டியன். வெகுண்டு - கோபித்து. காசினி - உலகம். அல் - இருள். பொழில் - சோலை. அம்பலவாணர் - சபையில் வாழ்பவர், நடராசர்.

3. மோட்டெருமை - பெரிய எருமை. வாவி - குளம். முட்டு - எருமையை முட்டிய. வெண்ணெய் - வெண்ணெய் நல்லூர். சரராமன் - சடையப்பர் பெயர்களுள் ஒன்று. சடையப்பர் கம்பரை ஆதரித்த வள்ளல்.

4. திருத்தங்கி என்பவன் உலோபி. மருத்தன் என்பவன் கொடையாளி. குடந்தை - கும்பகோணம்.

## கேள்விகள்

1. படிக்காசுப் புலவரது செய்யுளின் சிறப்பு எங்ஙனம் விளங்குகிறது ?
2. காளமேகப் புலவரது பாடலிற் குறிக்கப்பட்டுள்ள கதைகள் எவை ?
3. வெண்ணெய் நல்லூரின் சிறப்பு யாது ?
4. திருத்தங்கி உலோபி என்பது எதனால் தெரிகிறது ?

## பயிற்சி

1. பரிந்து, அம்பலவாணர், நெடுங்கதவு, வருவிருந்து, வெகுண்டு—இவற்றை உங்கள் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்லுக.

2. வில்லால், கல்லால், மோட்டெருமை, அஞ்சலென்ற, தமிழ்ப்பயிர்—இவற்றைப் பிரித்துக் காட்டுக.

## நிறுத்தல் குறிகள்

1. இந்த இடத்தில் இவ்வளவு நேரம் நிறுத்தி வாசிக்க வேண்டும் என்பதை அறிவிக்கும் குறிகள் நிறுத்தல் குறிகள் எனப்படும். நிறுத்தும் அளவு மாத்திரை எனப் பெயர் பெறும். இயல்பாகக் கண் இமைத்தல் அல்லது கைந்நொடித்தலுக்கு உண்டாகும் நேரமே மாத்திரை என்பது.

2. கந்தன் வற்றல் உண்டான்.—இவ்வாக்கியத்தின் இறுதியில் வைக்கப்பட்டுள்ள புள்ளிதான் முற்றுப்புள்ளி என்பது. இங்கு நான்கு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

3. கந்தன் கடைக்குப் போனான்; நான்கணா கொடுத்தான்; ஒரு புத்தகம் வாங்கினான்.—இவ்வாக்கியத்தில் முதல் இரண்டு இடங்களில் இடப்பட்டுள்ள குறிதான் அரைப் புள்ளி என்பது. இங்கு இரண்டு மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்.

ஒரு பெரிய வாக்கியத்தில் ஒரே எழுவாய் வந்து பல பயனிலைகள் வருமாயின், அப்பயனிலைகளை அடுத்து இக்குறி இடப்படும்.

4. கந்தன் கடைக்குப் போய், ஆறணா கொடுத்து, ஒரு புத்தகம் வாங்கினான்.—இவ்வாறு நீண்ட வாக்கியத்தில் பொருள் விளக்கத்திற்காகப் பெரும்பாலும் வினையெச்சங்களை அடுத்து இடப்படும் இக்குறி கால்புள்ளி எனப்படும். இங்கு ஒரு மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்.

5. கண்ணன் எங்குச் சென்றான்? அவனா இவன்?—இவ்வாறு வரும் கேள்வி வாக்கியங்களில் இறுதியில் இடப்படும் குறியே கேள்விக் குறி. இங்கு நான்கு மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்.

6. ஐயோ! அவர் இறந்து விட்டார்.—இவ்வாறு வருத்தம், வியப்பு, கவலை, அச்சம் முதலிய உணர்ச்சிகளை உணர்த்தும் வாக்கியம் உணர்ச்சி வாக்கியம் எனப்படும். உணர்ச்சிச் சொற்களை அடுத்து உணர்ச்சிக் குறியை இட வேண்டும். இங்கு நான்கு மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்.

7. கண்ணன் என்னைப் பார்த்து, "நாம் நாளை ஊருக்குப்போகலாம்," என்றான்.—இதில் " "—இக்குறிகள் நேரே பேசியதை உணர்த்துவன; ஆதலால் மேற்கோள் குறிகள் எனப்படும்.—இப்பாடப் புத்தகத்தில் இக்குறிகள் வந்துள்ள இடங்களைக் கவனியுங்கள்.

# NATIONAL TAMIL VACHAKAM

FORM I—PART II

BY

Dr. M. RAJAMANIKKAM, M.A., L.T., M.O.L., Ph.D.

THE NATIONAL PUBLISHING CO.

6, KONDI CHETTY STREET, MADRAS-1

 1958 [ *Price* { *As.* 12 / *nP.* 75